# புலவர்கள் உதிர்த்த முத்துக்கள்



முல்லை பிஎல். முத்தையா

# இந்நூல்

- அறுபது எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் கிராமங்களிலும், நகரங்களிலும் புலவர், வித்து வான், கவிஞர் என்ற பெயரில் பலர் இருந்திருக் கின்றனர். அவர்கள் கல்லூரிகளிலோ, பல்கலைக் கழகங்களிலோ படித்தவர்கள் அல்லர்.
- புராணங்களையும், காவியங்களையும், இலக்கண இலக்கியங்களையும் தாங்களாகவே படித்து புலமை பெற்றவர்கள், புகழும் அடைந்தார்கள்.
- அவர்கள் ஒருவரை ஒருவர் காணும்போது தங்கள் புலமையைக் காட்டிக் கொள்வது உண்டு.
- அவர்கள் பத்திரிகை எழுத்தாளர்கள் அல்ல!
- அத்தகைய புலமையாளர்களின் பேச்சுக்களில் சொற்குற்றம் பொருள் குற்றம் காண்பது அரிது.
- அவற்றை கேட்கும்போதும் படிக்கும்போதும் மிகவும் ரசிக்கத் தக்கதாக இருக்கும்.
- பல பக்கங்கள் உடைய கதைகளைப் படிப்பதைக் காட்டிலும் ஒன்று இரண்டு வரிகளில் புலவர்கள் சொல்லும் முத்துப் போன்ற சொற்களைக் கேட்கும்போது நம் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிடும்.

- என்னுடைய பதினைந்தாவது வயது முதல் புலவர்கள், வித்துவான்கள், கவிஞர்கள் முதலானவர்களைத் தேடிச் சென்று காண்பதிலும், பேசுவதிலும் மிகவும் ஆர்வம் கொண்டு இருந்தேன்.

- என்னுடைய பாட்டனாரும் ஒரு வித்துவான்.

- பல வெண்பாக்கள் பாடி உள்ளார்.

- இளமையிலிருந்தே புலவர்கள், வித்துவான்கள் முதலிய அறிஞர்கள் அருகில் இருக்கும்போது அவர்கள் கூறுவதைக் குறித்து வைத்துக் கொள்வது என் வழக்கம்.

- அவ்வாறு குறிப்பெடுத்து வைத்திருந்ததோடு நண்பர்கள் சிலர் சொன்னவற்றையும் இணைத்து இந்நூலை தொகுத்து உள்ளேன்.

323/10, கதிரவன் காலனி
அண்ணா நகர் மேற்கு
சென்னை-40

முல்லை பிஎல். முத்தையா

# பொருளடக்கம்

## 1

### மணம் கமழ் தமிழ்

பேரறிஞர்கள் தேவநேயப் பாவாணர் அவர்களும் ஔவை துரைசாமி பிள்ளை அவர்களும் ஒரு சமயம், பாவேந்தர் பாரதிதாசனைக் காணச் சென்றார்கள்.

அப்போது அவர்கள் இருவரையும் பார்த்ததும் பாவேந்தர் பலமாக மூக்கை உறிஞ்சினார்.

அதைக் கண்ட பாவாணர், ''உடலுக்கு என்ன?'' என்று கேட்டார்.

''உடல் நலமாகத்தான் இருக்கிறது. உங்கள் இருவரையும் காணும்போது, தமிழ்மணம் கமழுது'' என்றார் பாவேந்தர்.

## 2

### மன்னரிடம் உள்ள கோடி

நம் இந்திய நாடு விடுதலை பெறுவதற்கு முன்னர், இந்தியாவில் இருந்த சமஸ்தான மன்னர்கள் அனைவரும், டில்லியில் ஒரு மாநாடு நடத்தினார்கள்.

அதில் மன்னர்கள் ஒவ்வொருவரும் தங்களிடம் இத்தனை கோடி பணம் இருக்கிறது என்பதைப் பெருமையாகச் சொன்னார்கள்.

அப்போது இராமநாதபுரம் சமஸ்தான மன்னர் பாஸ்கர சேதுபதி அவர்கள், "என்னுடைய சமஸ் தானத்தில் ஒரே ஒரு கோடி... அதுதான் 'தனுஷ் கோடி' (இராமநாதபுரம் கடவுள்) என்று கூறினார் (கோடி - நூறு இலட்சம்; முனை; கடைசி)

## 3

## அரசும் வேம்பும்

இராமநாதபுரம் மன்னர் பாஸ்கர சேதுபதி யார் ஒரு சமயம் புலவர்களை வரவழைத்து மாநாடு நடத்த ஏற்பாடு செய்திருந்தார்.

வேம்புப் புலவர் என்பவர், அந்த மாநாட்டுக்குத் தாமதமாக வர நேரிட்டது.

அவரைப் பார்த்ததும், "வேம்புக்கு அவையில் இடமில்லை" என்றார் மன்னர்.

வேம்புப் புலவரும் சளைக்காமல், "அரசுக்கு அருகில் வேம்புக்கு இடம் உண்டு" என்று கூறிக் கொண்டு, மன்னரின் கால்களுக்கு இடையே தரை யில் அமர்ந்தார்.

மன்னர் அவருடைய நாவன்மையைப் பாராட்டி, அவையில் அவருக்கு இடம் அளித்தார்.

'அரசு' என்பது அரசரையும், அரச மரத்தை யும் குறிக்கும் 'வேம்பு' என்பது வேம்புப் புலவரை யும் வேப்பமரத்தையும் குறிக்கும்.

## 4

## இரண களம் எது?

இரண்டு புலவர்கள் சந்தித்தனர். அப்போது ஒரு புலவர் மெதுவாக, இடர்பட்டுப் பேசினார்.

அதை அறிந்த மற்ற புலவர், ''தாங்கள் சரியாகப் பேச இயலாமல் திணறுகிறீர்களே ஏன்?'' என்று கேட்டார்.

''இரணகளமாக இருப்பதால், நன்கு பேச முடியாமல் துன்புறுகிறேன்'' என்று பதில் அளித்தார் அந்தப் புலவர்.

''இரணகளமாக இருக்கிறது என்கிறீர்களே; போர்க்களத்திற்குப் போய் வந்தீர்களா?'' என்று கேட்டார் முதல் புலவர்.

''என் தொண்டை சில நாட்களாக, புண்ணாகி இருக்கிறது. அதையே 'இரணகளம்' என்று குறிப்பிட்டேன்'' என்றார் மற்றைய புலவர்.

## 5

## உண்ட இடம் எது?

புலவர் ஒருவர், தம் நண்பரான மற்றொரு புலவரைக் காண வந்திருந்தார். இருவரும் உணவு உண்டு, வெற்றிலைபாக்கு போட்டுக் கொண்டு அளவளாவினர்.

அப்போது வீட்டுப் புலவர் தம் மனைவியைக் கூப்பிட்டு, ''ஐயா உண்ட இடத்தில் சாணியைத் தடவு'' என்றார்.

அதை அறிந்ததும், ''ஆமாம், அவர் சொன்ன இடத்தில், விரைவாகப் பூசுங்கள்'' என்றார் வந்திருந்த புலவர்.

'உண்ட இடம்' என்பது, சாப்பிட்ட இடம் என்பதோடு, சாப்பிட்ட வாயையும் குறிக்கும். 'சொன்ன இடம்' என்பது, அவர் குறிப்பிட்ட இடம் என்பதோடு, அவர் வாயையும் குறிக்கும்.

## 6

### அனுபவம் எளிதாகி விடும்

ஒரு செல்வர், தம்முடைய சாதகத்தை சோதிடரிடம் காண்பித்தார்.

சாதகத்தைப் பார்த்த சோதிடர், ''உங்களுக்கு இப்பொழுது ஏழரை நாட்டுச் சனி தொடங்கியிருக்கிறது; அதனால் மூன்றரை ஆண்டுகள் மிகுந்த துன்பத்தையும், தொல்லையையும் கொடுக்கும்'' என்றார்.

சாதகம் பார்க்க வந்தவர், ''ஏழரை நாட்டுச் சனி பிடித்தால், ஏழரை ஆண்டுகள் என்று கூறுவார்கள்; நீர் மூன்றரை ஆண்டுகள் என்று கூறுவதன் காரணம் என்ன?'' என்றார்.

அப்போது, அங்கே வந்த புலவர் அதை அறிந்து, ''ஏழரை மூன்றரை அல்லவா? சோதிடர் அந்தக் கணக்கில் கூறுகிறார்'' என்றார்.

அங்கே வந்த மற்றொரு புலவர், ''மூன்றரை ஆண்டுகள் துன்புற்று, தொல்லைகளை அனுபவித்த பின் அவை அவ்வளவாகத் தெரியாமல், எளிதாகி விடும் அல்லவா? அதைத்தான் சோதிடர் கூறுகி றார்'' என்றார்.

# 7

## புலி வந்தால் என்ன?

வெண்பாப் புலிக் கவிராயர் என்னும் பெயர் கொண்ட ஒரு புலவர் இருந்தார். (வெண்பா இயற்றுவதில் அவர் புலி போன்றவர்.)

ஒருசமயம், சிவகெங்கை மன்னரைக் காண, வெண்பாப் புலிக் கவிராயர் சென்றார், கவிராயர் மாளிகையினுள் நுழையும்போது, ''புலி வருகிறது!'' என்று மன்னரின் எதிரில் கூறினார்.

மன்னர் அதைக் கேட்டுச் சிறிதும் சளைக்காமல் ''இங்கே வேல் உள்ளது!'' என்றார்.

மன்னர் 'வேல் இருக்கிறது' என்று கூறியதன் பொருள், தன்னுடைய 'அரண்மனை வித்துவானாக இங்கே வேல்சாமிக் கவிராயர் இருக்கிறார்' என்பதைக் குறிப்பிட்டதாகும். மற்றும், புலியைத் தாக்குவதற்கு 'வேல்' (ஈட்டி) உள்ளது என்றும் பொருளாகும்.

## 8

### ஓரமா? நடுவழியா?

பெரிய சாலையின் மத்தியில், பலர் பேசிக் கொண்டே சென்றனர். அவர்களில் இரண்டு புலவர்களும் சென்று கொண்டிருந்தனர். ''ஓரமாகப் போவது நல்லது; நடுவழியில் செல்வது ஆபத்தானது; ஓரமாகப் போகுமாறு, காவலர்கள் எச்சரிக்கிறார்கள், அவர்கள் பேச்சை மீறினால், தண்டனைக்கு ஆளாக நேரிடும்'' என்றார் புலவர் ஒருவர்.

''நாம் எந்தக் காரணத்தைக் கொண்டும் ஓரம் போகக்கூடாது; எப்பொழுதும் நடுவழியில்தான் செல்ல வேண்டும். அதுவே நீதி முறை'' என்றார் மற்றொரு புலவர்.

''நீங்கள் கூறுவது, நீதி முறைக்குப் பொருந்தும்; சாலை விதிமுறைகளுக்குப் பொருந்தாது'' என்றார் புலவர்.

(''ஓரம்''—விளிம்பு, ஒருதலைச் சார்பானது என்று பொருள்)

## 9

### கூடிப் படித்தவரா? கூடப் படித்தவரா?

சைவ மடத்தின் தலைவரும் ஒரு புலவரும் அளவளாவிக் கொண்டிருந்தனர்.

அப்போது அங்கே வேறு சிலரும் வந்திருந்தனர். அவர்களிடம், ''இந்தப் புலவர் கல்வி அறிவில் திறமையாளர்; இவர் நம்முடன் கூடப் படித்தவர்'' என்று கூறினார் மடத்தின் தலைவர்.

அதைக் கேட்டதும் புலவர், ''நான் தலைவர் அவர்களைவிடக் குறைவாகத்தான் படித்தேன். ஆயினும் நான் அவர்களுடன் கூடிப்படித்தேன் என்பதால்,'கூடப்படித்தவன்' என்று கூறினார்கள்; என்னிடம் கொண்டுள்ள அன்பின் மிகுதியால், அவ்வாறு கூறினார்கள். நான் அவர்களைவிட குறைவாகப் படித்தவனே!'' என்றார்.

(கூடிப்படித்தல்-சேர்ந்திருந்து படித்தல். கூடப் படித்தல் - மிகுதியாகப் படித்தல்.)

## 10

### பசுவை ஓட்டிச்செல்

கோவிந்தன் என்னும் அரசு அலுவலர் ஒருவர் வசித்து வந்தார். அவருடைய வீட்டிற்கு அடுத்த வீட்டில் புலவர் ஒருவர் இருந்தார். இருவருக்கும் சிறுபகை. பேசுவதில்லை.

ஒருநாள், அலுவலர் கோவிந்தனுடைய பசு, புலவருடைய தோட்டத்தில் புகுந்து மேய்ந்தது.

புலவர் அதைப் பிடித்துக் கட்டி வைத்தார். கோவிந்தனுடைய வேலையாள் பசுவை ஓட்டிவரச் சென்றபோது,புலவர் அதைவிட மறுத்து விட்டார்.

சிறிது நேரத்திற்குப்பின், பசுவை அவிழ்த்துக் கொண்டு கோவிந்தன் வீட்டு வாசலுக்குச் சென்று, ''கோவிந்தா, கோவிந்தா'' என்று கூப்பிட்டார் புலவர்.

எதிர் வீட்டுக்காரர்கள், ''அரசு அலுவலரை, புலவர் பெயர் சொல்லி கூப்பிடலாமா?'' என்றனர்.

''நான் அவர் பெயரைச் சொல்லிக் கூப்பிட வில்லையே!''

''கோ - பசு, இந்தா - ஓட்டிச் செல்'' என்று தானே சொன்னேன். இதில் என்ன தவறு?'' என்றார்.

எதிர் வீட்டாரும், கோவிந்தனும் புலவருடைய அறிவுத் திறனைப் பாராட்டினர்.

## 11

## எல்லோருக்கும் படி அளப்பவர்

தஞ்சை மாவட்டத்தில், பாடல்பெற்ற ஒரு கோயிலுக்கு, பண்டிதமணி கதிரேசன் செட்டியாரும் பேரறிஞர் வேங்கடசாமி நாட்டாரும் சென்று கொண்டிருந்தனர்.

அந்தக் கோயிலின் வாசற்படிகள் சில உடைந்து காணப்பட்டன. அதைச் குறித்து, 'படி இல்லை, படிஇல்லை' (அதாவது படிக்கட்டு இல்லை; பார்த்து நடக்கவேண்டும் என்ற கருத்தில்) கூறினார் நாட்டார் அவர்கள்.

''எல்லோருக்கும் படி அளந்து கொண்டிருக்கும் இறைவனின் கோயிலில் 'படி இல்லை' என்று சொல் கிறீர்கள்!'' என்று சொன்னார் பண்டிதமணி.

(வாயிற்படி என்றும், உண்பதற்கு படி அளிப்ப தும் பொருளாகும்)

# 12

## காதிரை சிரிக்கச்சொன்னார்

தமிழ்ப் புலவர் வகுப்பிலே பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அபுதுல் காதிர் என்னும் முஸ்லிம் மாணவன் ஒருவனும் அந்த வகுப்பிலே இருந்தான். அவனை காதிர் என்றே சுருக்கமாக அழைப் பார்கள்.

புலவர் காதிரைப் பார்த்து, ஒரு கேள்வி கேட்டார். அவன் தவறாக விடை அளித்தான். மாணவர்கள் எல்லோரும் சிரித்தனர் காதிர் மட்டும் சிரிக்காமல் இருந்தான். அதைக் கண்ட புலவர், ''சிரிக்காதிர் சிரிக்காதிர்'' என்றார்.

அதைக் கேட்ட மற்ற மாணவர்கள் ஒருவரும் சிரிக்கவில்லை, புலவர் மேலும், ''சிரிக்க ாதிர் சிரிக் காதிர்'' என்று கூறினார். அப்போது மாணவர்கள், நாம் சிரிக்காமல் இருக்கும்போதே, ஆசிரியர் இப்படிக் கூறுகிறாரே, யாரேனும் வாய்க்குள் சிரிக் கின்றனரோ என்ற எண்ணத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்தபடியே இருந்தனர்.

மாணவர்களின் தடுமாற்றத்தை அறிந்த புலவர், ''காதிர் மட்டும் சிரிக்காமல் இருந்தான். அதனால், அவனையும் சிரிக்கும்படி, 'சிரிக்காதிர்' சிரி+காதிர் என்று கூறினேன். வேறு ஒன்று மில்லை'' என்றார்.

(சிரி+காதிர் என்றால், சிரி காதிர் என்று பொருள் 'சிரிக்காதிர்' என்றால், ''சிரிக்காதீர்'' என் றாகும்.)

## 13

### பக்தர்களை தாங்கும் தகைமை

திருவாடுதுறை ஆதீனத் தலைவர் அம்பலவாண தேசிகரும் பண்டிதமணி கதிரேசன் செட்டியாரும் ஒருவரை ஒருவர் அறிந்திருந்தார்கள். ஆனால், சந்தித்ததில்லை.

முதல் முறையாக, அம்பலவாண தேசிகரைக் காணச்சென்ற பண்டிதமணி, முறைப்படி விழுந்து வணங்கினார்.

அப்பொழுது, பண்டிதமணியின் ஊன்றுகோல் வழுவியது. அதைப் பார்த்த தேசிகர், உடனே எழுந்து வந்து அவரைத் தாங்கிப் பிடித்தார்.

உள்ளம் நெகிழ்ந்த பண்டிதமணி, ''பக்தர் களாகிய நாங்கள் தவறுவதும், தாங்கள் தாங்குவ தும் இயல்புதானே'' என்றார்.

''இனிமேல் சந்திக்கும் பொழுது விழுந்து வணங்க வேண்டாம்'' என கேட்டுக்கொண்டார் தேசிகர்.

## 14

### பெரும் செல்வம்

செல்வர் ஒருவர் ஒரு புலவரிடம் தமிழ்க் கல்வி கற்றுக்கொள்ள விரும்பினார். புலவர் தினமும் செல்வர் வீட்டுக்குச் சென்று, தமிழ்க் கல்வியில் பயிற்சி அளித்தார்.

அதற்காக புலவருக்கு, மாசம் பத்து ரூபாய் அளித்தார் செல்வர்.

அந்தத் தொகை அப்போதைய நிலையில், புலவருக்கு மிகுந்த உதவியாக இருந்தது.

புலவரின் நண்பர் ஒருவர், "உமக்கு என்ன கிடைக்கிறது?" என்று அவரிடம் கேட்டார்.

அதற்குப் புலவர், 'மாசம்பத்து' என பதில் அளித்தார்.

(மா சம்பத்து—பெரிய செல்வம்; மாசம் பத்து)

## 15

### என்னையே பார்த்தாய்!

ஒரு புலவரின் மனைவி கற்பு நெறி உடையவர். தன் கணவரிடம் அன்பும் பக்தியும் கொண்டவர். கோயிலில் இறைவனை வணங்கினாலும்கூட தன் கணவனையே நினைத்து வணங்கக் கூடியவள்.

ஒரு நாள் கோயிலுக்குச் சென்று வந்தவள், தன் கணவனிடம் 'நான் கோயிலில் என்ன பார்த்தேன், தெரியுமா?" என்று நகைச்சுவை ததும்பக் கேட்டாள்.

"புலவர், "என்னோக்கினை என்று கூறினார்.

"நான் உங்களைக் கேட்டால், நீங்கள் என்ன பார்த்தாய்? என்று என்னையே கேட்கிறீர்களே!" என்றாள் அவள்.

புலவர், "என்னோக்கினை! என்றால், கோயிலில் இறைவன் உருவத்திலும் என்னையே பார்த்தாய்" என்று பொருள் விளக்கினார்.

## 16

### ஆராய்ந்த கைகளும், தேடிய கால்களும்

தணிகைமணி டாக்டர் செங்கல்வராய பிள்ளை அவர்கள், தேவாரங்களையும், திருப்புகழையும் ஆராய்ந்து, 'ஒளிநெறிகள்' என்னும் தலைப்பில் வெளியிட்டுப் பெருமை பெற்றவர்.

ஒவ்வோர் ஆண்டும், தமிழ் தாத்தா டாக்டர் உ.வே. சாமி நாதய்யர் அவர்களை, தணிகைமணி சென்று காண்பது வழக்கம்.

அய்யர் அவர்கள் நோயுற்றுப் படுத்திருந்தார். அவர் அருகில் சென்று, அவர் விழிக்கும் வரை நின்று கொண்டிருந்தார்.

அய்யர் கண் விழித்துப் பார்த்ததும், மகிழ்ச்சி ததும்ப, "திருப்புகழை ஆராய்ச்சி செய்த கைகள் ஆயிற்றே" என்று கூறி, தணிகைமணியின் இரு கைகளையும் பற்றி, தம் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

உடனே தணிகைமணி, அய்யரின் பாதங்களைப் பற்றியவாறு "சங்கத் தமிழ் ஏடுகளைத் தேடின கால்கள் ஆயிற்றே இவை" என்று கூறி வணங்கி னார்.

அறிஞர்களின் பெருமையை அறிஞர்களே அறிவர்.

## 17

### புரிந்து கொள்ளாத மனைவி

கடைக்குச் சென்று அரிசி வாங்கி வந்தார் புலவர். மனைவி அதை வாங்கி, சமையல் செய்து கொண்டிருந்தாள்.

சில நண்பர்களோடு திண்ணையில் இருந்து பேசிக்கொண்டிருந்தார் புலவர். அப்போது மனைவியை அழைத்து, 'அரிச்சுவடி' என்றார் புலவர்.

யாருக்கோ பாடம் சொல்லிக் கொடுக்கப் போகிறார் என நினைத்து, உள்ளே சென்று 'அரிச் சுவடி' புத்தகத்தை எடுத்து வந்து புலவரிடம் கொடுத்தாள் மனைவி.

"இது எதற்கு?" என்று கேட்டார் புலவர்.

"நீங்கள் தானே 'அரிச்சுவடி' என்று சொன் னீர்கள்" என்றாள்.

"நான் சொன்னது, அரிசியை தண்ணீரில் போட்டு, கல் இல்லாமல், 'அரிச்சு வடி' என்று அல்லவா சொன்னேன்" என்றார் புலவர்.

## 18

### நெடுமாலைக் கண்ட புலவர்

சைவ சமயத்திலும், வைணவ சமயத்திலும் ஆழ்ந்த பற்றுடைய புலவர் ஒருவர், சொற்பொழிவு நிகழ்த்துவதில் திறமை மிக்கவர்,

வைணவ சபை ஒன்றில் சொற்பொழிவு நிகழ்த்த அவரை அழைத்தனர்.

புலவர் சபைக்குச் சென்று, சிறப்பான சொற்பொழிவு நிகழ்த்தினார். புலவர் சைவ சமயத்தினராயினும் வைணவத்தில் மிகுந்த புலமை பெற்றிருப்பதைக் கண்டு வைணவர்கள் அவரைப் பெரிதும் பாராட்டிப் புகழ்ந்தனர்.

அதை அறிந்த சபைத் தலைவர், மிகக் களிப்புற்று, ஒரு பெரிய மலர்மாலையை வரவழைத்து, சொற்பொழிவாளரான புலவரைப் பாராட்டி, மலர் மாலையை அணிவித்தார்.

அந்த மாலை மிக நீண்டதாய், புலவரின் வயிற்றுக்கும் கீழே தொங்கியது. அந்த மாலையால் மிக மகிழ்ச்சியடைந்த புலவர், நன்றி கூற எழுந்தார்.

இன்று நான் வைணவ சமயச் சார்பாக, சொற்பொழிவு நிகழ்த்தியதனால், அடைதற்கு அரிய நெடுமாலை அடைந்தேன்'' என்று கூறினார்,

நெடுமாலை, நீண்ட மாலை, நீண்டு வளர்ந்த திருமாலை என்றும் பொருள்.

# 19

## பெண்மணிகளின் ஒலி

பண்டிதமணி கதிரேசன் செட்டியார், நேமத்தான் பட்டி பள்ளியின் ஆண்டு விழாவுக்குச் சென்றிருந்தார்.

அவர் சொற்பொழிவு நிகழ்த்தும்போது, பெண்களின் பகுதியில் பலர் பேசிக்கொண்டிருந்தனர். அது இடையூறாக இருந்தது.

அதைக் கவனித்த பண்டிதமணி, 'பெண்மணிகள் எப்போதும் ஒலித்துக்கொண்டேதான் இருக்கும்'' என்றார்.

உடனே பேச்சு நின்று அமைதி நிலவிற்று.

# 20

## அவர்கள் கற்புடையார்

குறுநில மன்னர் ஒருவரிடமிருந்து ஒரு புலவருக்கு, இரண்டு மூடைகள் அரிசி நன்கொடை கிடைத்தன. அதைப் புடைத்து, கற்களை நீக்கி, சுத்தமாக வைத்துக் கொள்ள எண்ணினார்.

புலவர் தம் மாணவனிடம் ''அரிசி மூடைகளைப் புடைப்பதற்கு இரண்டு பெண்களை அழைத்து வா. களவாணிகளை அழைத்து வராதே, அவர்கள் அரிசியைக் களவாடி, துணியில் முடிந்து கொண்டு போய்விடுவர்'' என்றார்.

மாணவன் இரண்டு பெண்களை அழைத்து வந்து, ''இவர்கள் களவாட மாட்டார்கள்; கற்புடையார்'' என்று கூறினான்.

மாணவனைப் பார்த்து, ''இவர்கள் கற்புடையார்கள் என்றால் அனுப்பிவிடு; இவர்களை ஏன் அழைத்து வந்தாய்? என்று கூறினார் புலவர்.

மாணவன் திடுக்கிட்டு, ''கல் புடைப்பதற்கு அழைத்து வரச் சொன்னீர்களே? இப்போது வேண்டாம் என்கிறீர்களே?'' என்றான்.

''ஆம். நான் கல் புடைப்பதற்கு அழைத்துவரச் சொன்னேன், நீயோ இவர்கள் கற்புடையார்'' என்கிறாயே! கல்புடையார்கள் என்றால், பிறகு ஏன்? கல் புடைப்பவர்களாகப் பார்த்து, அழைத்து 'வா' என்றார் புலவர். புலவரின் நகைச்சுவையை மாணவன் பெரிதும் ரசித்தான்.

(கல்புடையார் - கற் புடையார், கற்களை புடையாதவர்).

## 21

### இரண்டிலும் இரட்டியே!

இரட்டியார் என்ற இனத்தைச் சேர்ந்த புலவர் ஒருவர் பரிசு பெறுவதற்காக, சில பாடல்களை இயற்றிக் கொண்டு, ஒரு ஆதீனத் தலைவரைக் காணச் சென்றார்.

அந்தப் பாடலில் ஒரு இடத்தில், தம்மை 'அரசன்' என்று குறிப்பிட்டிருந்தார்.

ஆதீனத் தலைவருக்கு அதன் பொருள் புரிய வில்லை. அதனால் அது ஏன்?'' என்று கேட்டார்.

உடனே புலவர் இரட்டியார், ''நான் அரசன்; அ+ரசன் சாரமற்றவன்; அதாவது, ஒன்றும் அறியாத பதர்'' என்று கூறியுள்ளேன் என்று கூறினார்.

மகிழ்ச்சி அடைந்த ஆதீனத் தலைவர், புலவருக்குப் பரிசுகள் வழங்கி, ''நீர் இனத்திலும் இரட்டி; புலமையிலும் இரட்டி,'' என்று புகழ்ந்து கூறினார்.

(''இரட்டி என்பதற்கு, 'இரட்டிப்பு'' இரண்டு மடங்கு'' என்றும் பொருள் உண்டு.)

## 22

### காருக்குக் காத்திருப்பவர்கள்

வெளியூரிலிருந்து ஒருவர் சென்னைக்கு வந்து புலவருடைய இல்லத்தில் தங்கியிருந்தார்.

வந்த வேலை முடிந்ததும், நண்பர் புறப்படத் தயாரானார்,

அவரை வழி அனுப்புவதற்காக அவருடன் பேருந்து நிலையம் வரை சென்றார் புலவர்.

அங்கே பலர் வரிசையாக நின்று கொண்டிருந் தனர். (சென்னைக்குப் புதிதாக வந்தவர் நண்பர்) ''இவர்கள் ஏன் இப்படி வரிசையாக நிற்கிறார் கள்?'' என்று கேட்டார் நண்பர்.

''அவர்கள் கார்காத்தார் வரிசை'' என்றார் புலவர்.

“அவர்கள் கார்காத்த வேளாளர் இனத்தைச் சேர்ந்தவர்களா? நானும் அந்த இனத்தைச் சேர்ந் தவனே என்று கூறிவிட்டு, “அவர்கள் அவ்வாறு நிற்பதன் காரணம் என்ன?” என்றார் நண்பர்.

“அவர்கள் எந்த இனத்தவர் என்பது எனக்குத் தெரியாது; பேருந்தில் ஏறுவதற்கு, வரிசையாக (கியூவில்) நின்றால்தான், சிரமமின்றி, ஒருவர்பின் ஒருவராக ஏறலாம் என்ற ஏற்பாடு” என்றார் புலவர்.

வேளாளர் இனத்தில் பலவகை உண்டு. அவர் களில் ‘கார்காத்த வேளாளர்’ என்பதும் ஒருவகை.

இங்கே புலவர் குறிப்பிட்டது, காருக்குக் காத் திருப்பதை நகைச் சுவையாக, ‘கார்காத்தார்’ என்று குறிப்பிட்டார்.

## 23

### மொட்டைத் தலை தாங்காது

பண்டிதமணி கதிரேசன் செட்டியார், இளமைக் காலத்தில் தம் வீட்டில் இருந்து கொண்டே தமிழையும், வடமொழியையும் கற்று, பெரும் புலமையாளராகத் திகழ்ந்தவர்,

அந்த நாட்களில், ஒருநாள் தம் தோழர் ஒருவரை அழைத்து, திருக்குறள் நூலை அவரிடம் கொடுத்து, “நான் ஒவ்வொரு குறளாக ஒப்புவிக் கிறேன். தவறாக நான் சொன்னால், தயங்காமல்,

உடனே என் தலையில் குட்டு'' என்றார் பண்டித மணி.

''அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன்
முதற்றே உலகு''

என்ற முதல் குறளைக் கூறினார் பண்டிதமணி.

உடனே பண்டிதமணி தலையில் ஒரு குட்டு விழுந்தது.

''என்ன தவறு?'' என்று கேட்டார் பண்டிதமணி.

''அகர முதல வெழுத்தெல்லாம்...என்று புத்தகத்தில் இருக்கிறது. நீ அகரமுதல எழுத்தெல் லாம்...என்று கூறினாய் அதனால் குட்டினேன்'' என்றார் தோழர்.

''நீ சரிபார்த்தது போதும்'' என்று கூறி, புத்தகத்தை வாங்கிக் கொண்டார் பண்டிதமணி.

விவரம் புரியாத தோழர், ''ஏன் புத்தகத்தை வாங்கிக் கொண்டாய்?'' என்று கேட்டார்.

''உன்னிடம் நான் திருக்குறளை ஒப்புவித்தால், 1330 குறளுக்கும் 1330 குட்டுகள் வாங்க நேரிடும். என்னுடைய மொட்டைத்தலை தாங்காது'' என் றார் பண்டிதமணி.

(அதாவது இலக்கணப்படி நூலில், 'சந்தி' பிரிக்காமல் புலவர்கள் அச்சிடுவது வழக்கம். ஆனால் சொல்லும் பொழுது சந்தி' பிரித்துச் சொல்லுவார் கள். 'சந்தி' பிரிக்கவில்லையானால், படிப்பதற்குச் சற்று கடினமாக இருக்கும். பொருளும் புரியாது.)

## 24

### அவர் குறட்டை விடவில்லையே!

புலவர் ஒருவர் தமது வீட்டுத் திண்ணையில் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்.

புலவரைக் காணவந்த அவருடைய நண்பர், ''என்ன, இப்படிக் குறட்டைவிட்டுத் தூங்குகிறீர்கள் கேலி செய்யமாட்டார்களா?'' என்று கேட்டார்.

புலவர், ''என்ன இப்படி சொல்கிறீர்கள்? நான் எங்கே குறட்டை விட்டுத் தூங்கினேன்'' என்றார்.

''நீங்கள் குறட்டை விட்டுத் தூங்குவது உங்களுக்கு எப்படி தெரியும்? பிறர் சொன்னபோதிலும் நீங்கள் நம்ப மாட்டீர்கள்'' என்றார் நண்பர்.

''உங்கள் கண்முன்னே, நான் குறட்டில் படுத்துக் கொண்டிருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா?'' என்றார் புலவர்.

அதன்பின்னரே, குறட்டை என்பதை திண்ணை என்று பொருள் கற்பித்துக் கொண்டு, நகைச்சுவையாகப் பேசுகிறார் புலவர் என்னும் செய்தி நண்பருக்குத் தெரியவந்தது.

(குறடு என்பது, திண்ணையையும் குறிக்கும். தூங்கும்போது சிலர் குறட்டை விடுவதும் உண்டு. அது ஒருவித சப்தம்-ஒலி.)

## 25

### மேலைச் சிவபுரிக்குச் செல்லவில்லை

இரண்டு புலவர்கள், மேலைச்சிவபுரி என்ற ஊருக்கு நடந்து போய்க் கொண்டிருந்தனர்.

அப்போது இரண்டு பக்கங்களிலிருந்தும் இரண்டு கார்கள், மிக விரைவாக வந்தன.

இரண்டு கார்களுக்கும் மத்தியில், அவர்கள் இருவரும் கதிகலங்கி அப்படியே அகப்பட்டுக் கொண்டனர்.

சிறிது காயத்துடன் இருவரும் உயிர் தப்பினர்.

அவர்களில் ஒருவர், மற்றவரிடம் (வானத்தைச் சுட்டிக்காட்டி)

'நாம் இதுவரையில், மேலைச்சிவபுரிக்கே (மேலே உள்ள சிவலோகத்துக்கே) போய்ச் சேர்ந்திருப்போம். இறைவன் திருவருளால், உயிர் பிழைத்தோம்' என்றார். காயம் ஏற்பட்டபோதிலும், புலவர்கள் நகைச்சுவையை மறக்கவில்லை.

## 26

### சீனிவாசனின் துயில்

பண்டிதமணி ஒரு ஊருக்குச் சொற்பொழிவு நிகழ்த்தச் சென்றிருந்தார். சொற்பொழிவு முடிந்ததும், விருந்து அளித்து உபசரித்தனர் இரவு வேளையானதால், பால் கொண்டுவந்து பண்டிதமணிக்குக் கொடுத்தார் ஒருவர்.

பால் குவளையைக் கையில் வாங்கிப் பார்த்த பண்டிதமணி, ''திருப்பாற்கடலில் சீனிவாசன் துயில் கொள்கிறான்'' என்றார்.

பால் குவளையில எறும்பு கிடந்தது! ''சீனியில் கிடந்த எறும்பு சீனிவாசன் ஆனார்!'

அருகில் இருந்தோர், அதைப் புரிந்து கொள்ள வெகுநேரம் ஆயிற்று.

## 27

### உருத்திராச்சமாலை தங்கவில்லையா?

ஒரு திருக்கோயிலில் ஓதுவார் நாள்தோறும் தேவாரம் பாடிக் கொண்டிருந்தார். அவர் கழுத்திலே உருத்திராச்சமாலை அணி செய்தது. அது வெள்ளி வில்லையால் உருவாக்கப்பெற்றது.

அவரால் தங்க வில்லை அமைக்க இயலவில்லை.

கோயில் அறங்காவலர், ஓதுவாரின் உருத்திராச்சமாலையில் இருந்த வெள்ளி வில்லைக்குப் பதிலாக, தங்க வில்லை அமைத்துக் கொடுத்தார், அதை ஓதுவாருக்கு அணிவித்து மகிழ்ந்தார் அறங்காவலர்.

அப்போது, அருகில் இருந்த புலவர், ''ஓதுவாரின் உருத்திராச்சமாலை வெள்ளிவில்லை, தங்க வில்லை'' என்றார்.

'தங்க வில்லை' என்ற சொல், 'தங்கத்தினால் செய்த வில்லை' 'தங்கியிருக்கவில்லை' என்ற பொருளையும் குறிக்கும்.

## 28

### கட்டி வந்ததால், செலவுக்குக் கட்டிவரவில்லை

ஒருவர் சராசரி வருமானம் உள்ளவர் அவருடைய மகனுக்கு முதுகில் கட்டி உண்டாகி, அறுவை மருத்துவம் நடைபெற்றிருந்தது.

அந்த நண்பரைக் காணச் சென்றார் புலவர் ஒருவர். அவரிடம் நடந்ததைக் கூறி, செலவு அதிக மாகிவிட்டது. அதைச் சரிப்படுத்த முடியாமல் திணறிக் கொண்டிருப்பதாகக் கூறினார் அவர்.

அதைக் கேட்டு அனுதாபப்பட்ட புலவர், "உங்கள் மகனுக்குக் கட்டி வந்திருக்கிறது. உங்கள் செலவுக்குக் கட்டிவரவில்லை; என்ன செய்யலாம்?" என்றார்.

## 29

### பாலை விரும்பாதவர்

காரைக்குடியில், ஆண்டுதோறும் கம்பன் விழா சிறப்பாக நடைபெறும்.

பல பகுதிகளிலிருந்தும் அறிஞர் பெருமக்கள் வந்து, விழாவில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

அவர்களில் ஒருவர் தூத்துக்குடி வழக்கறிஞரும், அறிஞருமான பால் நாடார் சொற்பொழிவு நிகழ்த் தினார்.

இரவு உணவுக்குப் பின், பால் நாடாரிடம், பால் அருந்துகிறீர்களா?' எனக் கேட்டார் ஒருவர்.

அப்போது அருகில் இருந்த பாலகவி வயிநாகரம் இராமநாதன் செட்டியார், ''அவர் பால் நாடார்!'' என்றார்.

('பாலை விரும்பாதவர்! பால் நாடார்' என்பது ஒரு பொருள்.)

## 30

### வாயில் வெற்றிலை

அடுத்த ஊரில் இருந்த உறவினர் வீட்டுக்குச் சென்றார் புலவர் ஒருவர்.

''பகல் உணவை இங்கே முடித்துக் கொண்டு போகலாம்'' என்றார் உறவினர். புலவரும் சம்மதித்தார்,

உறவினர் மனைவி இலைபோட்டு விட்டு, இருவரையும் உண்பதற்கு அழைத்தார். இருவரும் எழுந்து சென்றனர். கறிகள் வைக்கப்படாமல், வெறும் இலை மட்டும் போடப்பட்டிருப்பதைக் கண்ட புலவர், ''வெற்றிலையாக இருக்கிறதே? என்றார்?''

''வெற்றிலை எங்கே உள்ளது?'' என்றார் வீட்டுக்காரர்.

''வெறுமையான இலையாக இருக்கிறதே என்று சொன்னேனே தவிர வெற்றிலையைப் பற்றிச் சொல்லவில்லை'' என்றார் புலவர்.

வீட்டுக்காரர், மனைவியை அழைத்து, உணவுப் பொருள்களைப் பரிமாறச் சொன்னார். எல்லா வற்றையும் படைத்து, "உண்ணுங்கள்" என்றார் வீட்டுக்காரரின் மனைவி.

அந்த அம்மாளைப் பார்த்த புலவர், "வெற்றி லையாக இருக்கிறதே" என்றார்.

"இதோ எல்லாம் படைக்கப்பட்டிருக்கிறதே!" என்றார் வீட்டுக்காரர்.

"உங்கள் மனைவியின் வாயைப் பாருங்கள்" என்றார் புலவர்.

மனைவி வெற்றிலை போட்ட வாயைக் கழுவா மல் நிற்பதைக் கண்டார் அவர்.

புலவர், இரண்டு தடவை 'வெற்றிலை' என்று கூறியதன் கருத்தை உணர்ந்தார் வீட்டுக்காரர்.

## 31

### கோடி வீட்டுக்கு அழைத்தார்

தமக்குத் தெரிந்தவர்கள் பலர் இருந்த ஊருக்கு புலவர் ஒருவர் சென்றார்.

அங்கிருந்த பலரும் தத்தம் இல்லங்களுக்குப் புலவரை அழைத்து விருந்து அளித்து மகிழ்ந்தனர்.

பிறகு, அந்த ஊர்க்காரர் தம் வீட்டுக்கு விருந் துக்கு அழைத்தார்.

அவரிடம் "உங்கள் வீடு எங்கே இருக்கிறது?" என்று கேட்டார் புலவர்.

''என் வீடு, அடுத்த தெருவில் உள்ள கோடி வீடு'' என்றார் அவர்.

''உங்களுடைய கோடி வீட்டுக்கு நான் எப்படி வரப்போறேன். வருவது சந்தேகம் தான்'' என்றார்.

'கோடி வீடு' என்றால், கடைசி வீடாகும். 'கோடிக் கணக்கான வீடு' என்னும் பொருளில் புலவர் நகைச்சுவையை உதிர்த்தார்.

# 32

## முதல் தரம்

குழந்தைக் கவிஞர் வள்ளியப்பா, ஒரு நண்பர் வீட்டுக்குச் சென்றிருந்தார். அந்த நண்பர், கவிஞரை வற்புறுத்தி அழைத்துச் சென்று, இலையின்முன் உட்காரச் செய்து அருகில் இருந்து உபசரிக்க முற்பட்டார்.

உணவில் சிலவற்றை தவிர்த்து சிறிதளவே உண்டார் கவிஞர்.

''கவிஞர் சரியாக உண்ணவில்லையே; உணவு நன்றாக இல்லையா?'' என்று கேட்டார் நண்பர்.

அதற்கு கவிஞர், ''உணவு முதல் தரம்; நான் இரண்டாம் தரம்'' என்றார்.

(''வீட்டில் சாப்பிட்டு விட்டேன்; இப்போது, இரண்டாவது தடவையாக இங்கே சாப்பிடுகிறேன்,' என்பதை நகைச்சுவையாகக் குறிப்பிட்டார்.)

# 33

## பிள்ளைக்குத் தொட்டில் சொந்தம்

செட்டி நாட்டு வட்டாரத்தில், ஒரு ஊருக்குக் கோடை காலத்தில், அப்பாவு பிள்ளை என்ற புலவர் முன்பே தமக்கு அறிமுகமான செட்டியார் ஒருவர் வீட்டுக்குச் சென்றார்.

அங்கே கிணற்றின் அருகில் இருந்த தொட்டியில், செட்டியார் குளிப்பதற்காக தண்ணீர் நிரப்பப் பட்டிருந்தது. எங்கே குளிப்பது என எண்ணிக் கொண்டிருந்த அப்பாவு பிள்ளை, தொட்டியில் இருந்த தண்ணீரைக் கண்டதும், மிக மகிழ்ச்சியோடு அதில் இறங்கி உட்கார்ந்து விட்டார்.

வீட்டுக்காரச் செட்டியார் வந்து பார்த்தார்; புலவரைப் பார்த்து, ''எனக்காக வைத்திருந்த தொட்டியில் நீர் இறங்கிக் குளிக்கலாமா?'' என்று மிடுக்கோடு கேட்டார்.

உடனே அப்பாவு பிள்ளை, தொட்டிக்கும் பிள்ளைக்கும்தான் சொந்தம். செட்டிக்கும் தொட்டிக்கும் என்ன சம்பந்தம்?'' என தாமும் மிடுக்காகவே பதில் அளித்தார்

தொட்டிலுக்கும் பிள்ளைக்கும் தானே தொடர்பு என்பது இயல்புதானே.

# 34

## பரண் அமைத்துப் பாடுகின்றவர் யார்?

ஒரு புலவரும் அவருடைய மாணவர்களும் சிற்றூரின் வயல் வெளியில் நடந்து சென்றனர் அங்கே, தினை, கம்பு, சோளம் முதலானவை நன்கு விளைந்திருப்பதைக் கண்டனர்.

கொல்லைகளின் மத்தியில், சிலர் பரண்கள் அமைத்துப் பாட்டுப்பாடி, பறவைகளை ஓட்டிக் கொண்டிருந்தனர்,

ஒரு மாணவன், ''இந்த நாளில் பரணர்கள் இருப்பார்களேயானால், இக் காட்சியை, எவ்வளவு அழகாகப் பாடுவார்கள்'' என்றார்.

அதைக் கேட்டதும் புலவர் மாணவனைப் பார்த்து, ''ஏன் இன்றும் பரணர்கள் இருந்து பாடிக் கொண்டுதானே இருக்கின்றனர்.'' என்றார் புலவர்.

''பரணர் வெகு காலத்திற்கு முன் இருத்தவர்க ளாயிற்றே; இன்று எவ்வாறு இருந்து பாடிக் கொண்டிருக்க முடியும்?'' என்றான் மாணவன்.

அதைக் கேட்ட புலவர், நீ பொதுவாகப் பரணரைப் பற்றிக் கூறியதால், நானும் பொது வாகப் பரணரைப் பற்றிக் குறிப்பிட்டேன்; நான் குறிப்பிட்ட பரணர் அதோ பரண்களில் இருந்து,

பாடிக் கொண்டிருக்கின்றனரே; அந்தப் பரணர்கள் பரண்களில் இருப்பவர்கள் பரணர்கள் அல்லரோ?'' என்றார் புலவர்.

(கடைச் சங்க காலத்தில் இருந்த புலவர்களைப் பரணர் என்று கூறுவர்.)

## 35

### இனம் தெரிந்து விட்டது

ஒரு குறுநில மன்னரைக் காண அவரது மாளிகைக்குச் சென்றார் ஒரு புலவர்.

அப்போது புலவருக்கு வாசற்படி தடுக்கியது.

அதைக் கண்ட மன்னர், ''படிதட்டுதோ?'' என்றார்.

''ஆயினும், மரப்படிதானே!'' என்று கூறினார் புலவர்.

படிதட்டும் 'தட்டார்' இனத்தவர் புலவர். குறுநில மன்னரோ 'மறவர்' இனத்தவர். இருவருக்கும் சிரிப்பு அடங்கவில்லை.

## 36

### கொப்பரையில் தண்ணீர் இல்லையா?

செல்வந்தர் ஒருவர் வீட்டில் திருமணம். விருந்து உண்ட பிறகு, கை கழுவுவதற்குப் பெரிய கொப்பரையில் தண்ணீர் நிரப்பி வைத்திருந்தனர்.

தண்ணீர் தீர்ந்தபின், ஒருவர் கைகழுவச் சென்றார். கொப்பரைக்கு அருகில் நின்று கொண்டு, "கொப்பரையில் தண்ணீர் இல்லை'' என உரக்கக் கூறினார்.

அதைக் கேட்டுக்கொண்டு வந்த புலவர், "நீர் சொல்வது புதுமையாக இருக்கிறது? கொப்பரையில் தண்ணீர் இல்லை என்று சொல்கிறீரே; தண்ணீர் இல்லாதது தானே கொப்பரை? இது உமது அறிவுக்கு எட்டவில்லையா?'' என்றார்.

(கொப்பரை - கடாரம். உலர்ந்த தேங்காயையும் கொப்பரை என்று கூறுவர்.

## 37

### தொண்டையில் கம்மல்

பேராசிரியர் ஒருவர், பல சொற்பொழிவுகளுக்குச் சென்று, வீடு திரும்பினார்.

அவரைக் காணவந்த நண்பர் உங்கள் குரலில் மாறுபாடு தெரிகிறதே?'' என பேராசிரியரிடம் கேட்டார்.

"பெண்ணின் காதில் இருப்பது, என் தொண்டையிலே இருக்கிறது அதனால் சரியாகப் பேச இயலவில்லை'' என்றார் பேராசிரியர்.

"பெண்ணின் காதில் இருப்பது, உங்கள் தொண்டைக்கு எப்படி வந்தது'' என்று கேட்டார் நண்பர்.

"'பெண் காதில் அணிந்திருப்பது என்ன?'' என்று கேட்டார் பேராசிரியர்.

''காதில் அணிந்திருப்பது கம்மல்!'' என்றார் நண்பர்.

''அதுதான் என் தொண்டையில் வந்திருக்கிறது! அதனால்தான் சரியாகப் பேச முடியவில்லை'' என்றார் பேராசிரியர்.

பேராசிரியரின் தொண்டை கம்மியிருப்பதை உணர்ந்தார் நண்பர்.

(காதணி, கம்மல், கடுக்கன், தோடு என பலவாறு கூறுவது உண்டு.)

## 38

### அவன் கடையில் இருக்க வேண்டியவன்

மாணவர் கலைக் கழகத்தின் ஆண்டு விழாவுக்கு ஒரு புலவர் சொற்பொழிவு நிகழ்த்தச் சென்றார்.

விழா தொடங்குமுன், மாணவர்களிடம் பல கேள்விகளை கேட்டு, அவர்களின் அறிவுத்திறனை ஆராய்ந்து பார்த்தார் புலவர்.

அந்த மாணவர்களில் ஒருவன் மட்டும், புலவரின் கேள்விகளுக்குப் பதில் கூறாமல் மக்காக இருந்தான்.

அவனைப் பார்த்து, ''நீ எந்த இனத்தைச் சேர்ந்தவன்?'' என்று கேட்டார் புலவர்.

''செட்டியார் இனத்தைச் சேர்ந்தவன்'' என்றான் அவன்.

அதுதான், ''கடையில் இருக்கிறாயோ?'' என்றார் புலவர்.

(கடையில் என்பது 'கடைசியில்' என்று பொருளாகும். மற்றொன்று: பொருள்கள் விற்பனை செய்யும் 'கடை' என்றும் பொருள்)

## 39

### மாம்பழத்தைக் காண 'இ' வந்தது!

இராமசாமிக் கவிராயர் என்பவர் மாம்பழக் கவிராயரைக் காணச் சென்றார்.

மாம்பழக் கவிராயர் பார்வை இழந்தவர். ஆயினும், அவருடைய புலமை பலராலும் வியந்து, பாராட்டத்தக்கதாக இருந்தது.

யாரோ தம்மைக் காணவந்திருக்கிறார் என்பதை அறிந்த மாம்பழக் கவிராபர், ''வந்திருப்பவருடைய பெயர் யாது?'' என்று கேட்டார்.

வந்தவர், ''இராமசாமிக் கவிராயர்'' என்று கூறினார்.

(ரகரத்தை முன்னே கொண்டு எழும்பும் பெயர்களுக்கு இகரம் கொடுக்க வேண்டியதில்லை என்பது மாம்பழக் கவிராயர் கொள்கை).

இராமசாமிக் கவிராயரை நோக்கி, ''ராமசாமிக் கவிராயர் என்னைக் காணவந்தது சரி. 'இ' எங்கே வந்தது? என்றார்.

இராமசாமிக் கவிராயரும் புலமை மிக்கவர். சிறிதும் தயங்காமல், ''இ' மாம்பழத்தின் சுவையை அறியும் பொருட்டு வந்தது'' என்றார்.

## 40

### குரங்குகளும் மரமும்

புலவர்களும், கவிஞர்களும் சேர்ந்து கூட்டமாக, குறுநில மன்னர் ஒருவரைக் காணச் சென்றனர்.

அவர்களைப் பார்த்ததும், ''வாருங்கள், கவிக் கூட்டங்களே!'' என்று கூறி வரவேற்றார் மன்னர்.

''நீங்கள் தருப்போல இருக்கிறீர்களே!'' என்றார்கள் கவிஞர்கள்.

'கவிக் கூட்டங்கள்' என்பதற்கு, 'குரங்கு கூட்டங்கள்' என்றும் ஒரு பொருள் உண்டு.

'தருப்போல' என்பதற்கு, 'மரம்போல' என்றும் ஒரு பொருள் உண்டு.

மரத்தில் தானே குரங்குக் கூட்டமாக ஓடி ஆடி விளையாடும்!

## 41

## உடையார் முன் உடைந்ததே

உடையார் பாளையம் என்ற ஊரில் குறுநில மன்னர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் மிக நீளமாக இருந்ததால், எல்லோரும் அவரை 'உடையார்' என்றே அழைத்தனர்.

அவரிடம் பரிசு பெறுவதற்காக, அவரைப் போற்றிக் கவிதைபாடி, அதனுடன் ஒரு தேங்காயை யும் வாங்கிக் கொண்டு சென்றார் புலவர்.

குறுநில மன்னர் உடையார், மண்டபத்தில் சரிகை உடைகளை அணிந்து, தலையில் கிரீடத் தைச் சூட்டிக் கொண்டு வெள்ளிச் சிம்மாசனத்தில் அமர்ந்திருந்தார்.

புலவர் மண்டபத்துக்குள் நுழைந்தார். அவர் அதற்கு முன், குறுநில மன்னரையோ, மண்டபத் தையோ பார்த்து அறியாதவர்.

அங்கே சென்றதும் உடல் நடுங்கி, கால்கள் தடுமாறி, கையில் இருந்த தேங்காய் தவறிக்கீழே விழுந்து உடைந்து விட்டது.

புலவரோ தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, "மக்கள் அனைவரும், "உங்களை, உடையார், உடையார்" என்று கூறி களிக்கின்றனர். அத்தகைய உடையார் முன், இது உடைந்து விட்டதே" என்று கூறினார்.

புலவரின் சமயோசித அறிவைப் பாராட்டி பரிசுகள் வழங்கினார் உடையார்.

('உடையார்' என்பதற்கு உடைக்க முடியாதவர். 'எல்லாம் உள்ளவர்' என்று பொருள் உண்டு.)

## 42

### எண்ணெய் தேய்த்துக் கொள்ள பலகை!

ஒரு செல்வந்தர் இல்லத்துக்கு புலவர் சென்றார். அவர் செல்வந்தருக்கு முன்னரே அறிமுகமானவர்.

ஒருநாள், புலவர் எண்ணெய் தேய்த்துக் குளிக்க விரும்பினார். அவருக்கு எண்ணெய், சிகைக்காய் முதலானவற்றுடன் ஒரு ஆளை அனுப்பினார் செல்வந்தர்.

புலவர், வேலையாளைப் பார்த்து, "எனக்கு இரு கை போதாது" என்றார்.

வேலையாள் செல்வந்தரிடம் சென்று, "புலவருக்கு எண்ணெய் தேய்க்க இரு கை போதாது" என்று கூறுகிறார் என்றான்.

"இரு கை போதாது என்றால், எத்தனை கை வேண்டும்?" என்றார் செல்வந்தர்.

அங்கே இருந்த உள்ளூர் புலவர், செல்வந்தரைப் பார்த்து, புலவருக்கு இரு கை போதாது என்றால், பலகை அனுப்புங்கள்" என்றார்.

உடனே வேலையாள் மூலம் 'பலகை' அனுப்பினார் செல்வந்தர்.

(பலகை என்பது, உட்கார்ந்து எண்ணெய் தேய்த்துக் கொள்வதற்கான பலகை. அதாவது 'ஆசனப்பலகை'யாகும்.)

## 43

### இருவரும் ஒரே நிலையா?

ஒருநாள் மாலை வேளையில், புலவரும் அவருடைய நண்பரும் வயல்வெளியில் நடந்து சென்று கொண்டிருந்தார்கள்.

அப்போது இருவர் எதிரே வந்து கொண்டிருந்தனர். அவர்களுடைய தோற்றம் ஒரே மாதிரியாக இருந்ததைக் கண்ட புலவர், ''அவர்கள் இருவரும் உடன் பிறந்தவர்களா?'' என்று கேட்டார்.

ஆம், இருவரும் உடன் பிறந்தவர்கள். இருவரும் ஒத்த கல்வியறிவு உடையவர்கள். ஆனால், மூத்தவன் பணமுடையவன். இளையவன் பணமற்ற வறியவனாக இருக்கிறான். இதுவே, அவர்களுக்குள் ஏற்றத் தாழ்வு'' என்று கூறினார் நண்பர்.

''அப்படியானால், பணத்தில் இருவரும் ஒரே நிலைமை உடையவர்கள் என்று சொல்லுங்கள்'' என்றார் புலவர்.

''இல்லை, மூத்தவன் பணமுடையவன்; இளையவன் ஏழை என்கிறேன்'' என்றார் நண்பர்.

''அப்படியானால் சரிதான், இருவரும் ஒரே நிலையில்தான் இருக்கின்றனர், இளையவன் பணம் இல்லாதவன்; 'பணத்துக்கு முடைப்படுகிறான்'. மூத்தவனோ பண முடையவன் இருவர் நிலையும் சரியாகத்தான் இருக்கிறது'' என்றார் புலவர்.

('பணமுடையவன்' என்பதற்கு, பணத்துக்கு முடைப்படுகிறான். பணமுடை என்பதற்கு, பணத்துக்கு தட்டுப்பாடு, நெருக்கடி என்ற பொருள் உண்டு.)

## 44

## இப்படி ஓர் மகிழ்ச்சியா?

சைவ சமயத்தில் பற்றுதல் மிகுதியாக உள்ள ஒரு புலவர். அவர் வைணவத்தில் மிகுந்த வெறுப்புடையவர். வைணப் பெயரைக் கேட்க நேர்ந்தால், உடனே 'சிவ சிவா' என்று கூறுவார்.

அந்தப் புலவரிடம் பாடம் கற்றுக் கொள்ள மாணவன் ஒருவன் வந்தான். அவனிடம், ''உன் பெயர் என்ன?'' என்று கேட்டார்.

''என் பெயர் சிவராமலிங்கம்'' என்றான் மாணவன்.

புலவர் மகிழ்ச்சிததும்ப, 'அகப்பட்டுக் கொண்டான், 'அகப்பட்டுக் கொண்டான்' என்று உரக்கக் கூவினார்.

மாணவனுக்கு புலவரின் கூப்பாடு புரியவில்லை. அவரையே பார்த்தபடி நின்றான்.

புலவர் மகிழ்ச்சியோடு, "சிவனுக்கும் லிங்கத் துக்கும் மத்தியில் இராமன் அகப்பட்டுக் கொண் டான்' என்று கூறி அமைதியானார்.

## 45

### புலவருக்கு இசைவாணர் அளித்த பதில்

இசைவாணர் ஒருவர், தம் நண்பரான புலவரும் பேசிக்கொண்டிருந்தனர்.

அப்போது, இசைவாணரிடம் "தங்களுடைய பாட்டு அருமையாக இருப்பதாகப் பலர் கூறுகின்ற னர். உங்கள் இசை நிகழ்ச்சியை நான் ஒரு முறை கூட கேட்டதில்லை; ஒரு நாளைக்கு உங்களைப் பாடையிலே (பாட்டுப் பாடும்போது) பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறினார் புலவர்.

அதற்கு இசைவாணர், "என்னைப் பாடையிலே பார்க்க வேண்டுமானால், சாகையிலே வா, பார்க்க லாம்'' என்றார்,

அதைக் கேட்ட புலவர், "நீங்கள் பல்லாண்டு வாழ வேண்டும்; சொல் சரியாக அமையாமல் பாடையிலே என்று கூறிவிட்டேன், அதனால் நீங்கள் தவறான பொருள் செய்து கொண்டு, 'சாகும்போது' வரச்சொல்லி விட்டீர்களே!'' என்று வருந்தினார் புலவர்.

"'இல்லை, இல்லை, 'சாகையில்' வசிக்கும் இடத்தில் வரச் சொன்னேன்'' என்றார் இசைவாணர்.

# 46

## காபியில் பாலைக் காட்டாதவர்

இரண்டு புலவர்கள் சிற்றுண்டி விடுதிக்குக் காபி குடிப்பதற்குச் சென்றனர். காபி வந்தது. பால் போதிய அளவு விடாததால், காபி கருமைநிறமாகக் காட்சி அளித்தது.

அதனைக் கண்ட புலவர், "கடைகாரரே! காபி கருமை நிறமாகக் காணப்படுகிறதே! பால் கூடுதலாகக் கலக்கப்படாதா?" என்றார்.

மற்றொரு புலவர், சிற்றுண்டி விடுதியின் முன்னே, தொங்கவிடப்பட்டிருந்த அறிவிப்பு பலகையில், 'பாலைக் காட்டார் கிளப்' என்று எழுதியிருந்ததை அவர் உள்ளே போகும்போதே பார்த்துக் கொண்டு சென்றார்.

எனவே, அவர் தம் நண்பரான புலவரிடம் "வெளியே போட்டிருந்த கிளப்பின் பெயரை, தாங்கள் பார்க்கவில்லையா? 'பாலைக் காட்டார் கிளப்பில் வந்து காபியில் பாலை காட்டவில்லை என்றால், எப்படி காட்டுவார்கள்?" என்றார்.

அதைக் கேட்ட முதல் புலவர், 'பாலைக்காடு' என்ற ஊரைச் சேர்ந்தவர் என்று நினைத்துக் கொண்டேன். இப்பொழுதுதான் எனக்குப் புரிகிறது; பெயருக்கு ஏற்றபடி, காபியில் பாலைக் காட்டவில்லை என்று தெரியவந்தது" என்றார்.

# 47

## நூறு நானூறு ஆயிற்று

புலவர் ஒருவர், குறுநில மன்னரிடம் பரிசு பெறச் சென்றார்.

மன்னரும், புலவரிடம் நூறு ரூபாயை பரிசாகக் கொடுத்தார்.

"அந்த ரூபாய் தங்களிடமே இருக்கட்டும்; பிறகு வந்து பெற்றுக் கொள்வதாகக் கூறி" விட்டுச் சென்றார் புலவர்.

சில மாதங்களுக்குப் பிறகு புலவர் மீண்டும் வந்து, "தாங்கள் எனக்கு நூறு தருவதாகக் கூறினீர்கள்" என்றார். 'ஆம்' என்றார் மன்னர். சிறிது நேரத்தில் "தாங்கள் இருநூறு தருவதாகச் சொன்னீர்கள்" என்றார் புலவர்.

அடுத்து, "முன்னூறு தருவதாகக் கூறினீர்கள்" என்றார் புலவர்.

அதற்கு அடுத்து, "நானூறு தருவதாகக் கூறினீர்கள்" என்றார் புலவர்.

புலவர் கூறியதைக் கேட்டு மன்னரின் முகம் கடுகடுப்பாகி, "என்ன புலவரே! நூறு தருவதாக, நான் கூறியதை நானூறு என்று பொய் புகல்கிறீரே?" என்றார்.

புலவர் புன்முறுவலுடன், "இரு, நூறு தருகிறேன் என்றீர்கள்," "முன், நூறு (முன்பு) தருவதாகக் கூறினீர்கள்,"

''நான் நூறு (நானூறு) தருவதாகக் கூறினீர்கள்'' எனவே ''நான் பொய் புகவில்லையே!'' என்றார் புலவர்.

புலவரின் நயமான சொற்களைக் கேட்டு, மகிழ்ந்த மன்னர், புலவருக்கு நானூறு ரூபாய் அளித்தார்.

## 48

### தந்தைக்கும் மகனுக்கும் உள்ள அறிவு

ஒரு சிற்றூரின் உயர்நிலைப் பள்ளி மாணவனிடம், 'சிலப்பதிகார'த்தை எழுதியது யார்? என்று கேட்டார் தமிழ் ஆசிரியர்.

மாணவன் பயந்தபடியே, ''நான் எழுதவில்லை!'' என்று கூறினார்.

தமிழ் ஆசிரியருக்கு வியப்பு மேலிட்டது. ஏனெனில் அந்த மாணவனின் தந்தை பள்ளியின் ஆட்சிக்குழுவில் உறுப்பினராவார். அதனால் அவரிடம் சென்று விவரத்தைக் கூறினார் தமிழ் ஆசிரியர்.

''அவன்தான் எழுதியிருப்பான். உங்களுக்குப் பயந்து, தான் எழுதவில்லை'' என்று சொல்லியிருக்கிறான் போகட்டும் அவனை விட்டு விடுங்கள் என்று சொன்னார் மாணவனின் தந்தை. தமிழ் ஆசிரியருக்கு வருத்தமும் சிரிப்பும் மேலிட்டது.

# 49

## தட்டு அங்கேயா இங்கேயா?

குறுநில மன்னரைக் காணச் சென்றார் ஒரு புலவர். அவர் பாடிய பாடலைக்கேட்டு மகிழ்ந்தார் மன்னர். புலவருக்கு விருந்து அளித்தார். அதன் பின், வெள்ளித் தட்டில், வேட்டி, பட்டு, பழங்கள், ரூபாய் முதலானவற்றை வைத்து புலவருக்குப் பரிசு அளிக்கச் செய்தார் மன்னர்.

புலவர் மிக்க மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டார். ஆனால் அப்போது, அந்த வெள்ளித் தட்டின்மீது ஆசை உண்டாயிற்று அவருக்கு. மன்னரிடம், ''தட்டு இங்கேயா? அங்கேயா?'' என்றார் புலவர்.

புலவரின் கருத்தை அறிந்த மன்னர் ''தட்டு அங்கேயே!'' தட்டு என்பதை தாம்பாளம் என்று சொல்வதும் உண்டு. 'தட்டு' என்பதற்குத் 'தட்டுப் பாடு' வறுமை என்ற பொருள் உண்டு.

'தட்டு தங்களுக்கா? அல்லது எனக்கா?' என்ற பொருளில் புலவர், 'அங்கேயா? இங்கேயா?' என்று சுருக்கமாகக் கேட்டார் 'தட்டுப்பாடு தங்களுக்கே' என்று நயமாகக் கூறினார் மன்னர்.

# 50

## இனியவரை துணைகொள்

உயர்நிலைப் பள்ளியில் இருவர் படித்து வந்தனர், ஒருவன் பெயர் இளவழகன்; மற்றொருவன் பெயர் நிலவழகன். இருவரும் இணைபிரியாத நண்பர்களாக இருந்தனர். நல்ல குணம் உள்ளவர்கள்.

அவர்களுடைய தோழமையைக் கண்ட ஆசிரியர்களும் மாணவர்களும் வியப்படைந்தனர். வேறு மாணவர்களுக்குப் பொறாமையும் உண்டாயிற்று.

திடீரென்று நிலவழகனுக்குக் காய்ச்சல் உண்டாகியது, அடுத்த மூன்று நாட்களில் நிலவழகனின் உயிர் பிரிந்து விட்டது.

பள்ளியே வருத்தத்தில் ஆழ்ந்தது.

நிலவழகனின் பிரிவு இளவழகனை மிகவும் வாட்டியது. அவனுடைய வருத்தத்திற்கு அளவே இல்லை. ''இனி யாரை துணை கொள்வேன்'' என்று சொல்லிச் சொல்லி ஏக்கமுற்றான்.

அவனுடைய நல்ல குணத்தை அறிந்த பள்ளியின் தமிழ்ப் புலவர், ''இளவழகா! இனி யாரைத் துணைக் கொள்வேன் என்று கூறாமல், இனியாரை துணைக் கொள்வாயாக! அவ்வாறு இனியாரை - இனியவரை துணையாகக் கொள்க. அதனால், நீ நன்மைகள் பல பெற்று வாழலாம்'' என்றார்.

(இனி யாரை - 'இனியாரை' என்று பொருள். 'இனியார்' என்ற சொல்லுக்கு இனிய குணம் உள்ளவர் என்ற பொருள்)

# 51

## படிப்பதை நிறுத்து

அருணன் என்னும் சிறுவன் வீட்டில் பாடம் படித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது, அவனுடைய தாய் அவனைக் கூப்பிட்டாள். அவனோ இருந்த இடத்தில் இருந்தபடியே, 'என்ன?' என்று கேட்டான்.

''இங்கே ஒரு சிறு வேலை இருக்கிறது. நீ இங்கே வந்து அந்த வேலையைச் செய்துவிட்டுப் போ'' என்றாள் அவன் தாய்.

''நான் இப்பொழுது படித்துக் கொண்டிருக்கிறேன், வர இயலாது'' என்றான்.

''நான் சொல்வதைத் தட்டலாமா? பெற்றோருக்கு கீழ்ப்படிந்து நடப்பது அல்லவா படிப்பதற்கு அழகு'' என்றாள் தாய்.

''அதற்கு நான் என்ன செய்வது? ஔவையார் ஓதுவதொழியேல் என்று கூறியுள்ளார். அதைப் பின்பற்றி நான் நடக்கின்றேன்'' என்றான் சிறுவன்.

அவர்களுடைய உரையாடலைக் கேட்டுக் கொண்டு வந்த புலவர், ''தம்பி, ஓதுவது ஒழியேல் என்றார், சிறுவன் மகிழ்ச்சியோடு, அம்மா! புலவர் சொன்னதைக் கேட்டாயா? அவர்கூட என் சொல்லை ஆதரிக்கிறார்'' என்றான்.

''தம்பி, நான் சொல்வதைச் சரியாகப் புரிந்து கொள். 'ஓதுவது ஒழியேல்' என்றார் புலவர். சிறுவன் புரியாமல் விழித்தான். ''நான் சொன்ன பிறகும்கூட உட்கார்ந்திருக்கிறாயே? உடனே, 'ஓதுவது ஒழி, அம்மா சொல்வதை 'ஏல்' படிப்பதை நிறுத்தி, ''அம்மா சொல்வதை ஏற்றுக்கொள்'' என்று விளக்கிக் கூறினார் புலவர்.

# 52

## அவர் கூறியதும் இவர் கூறியதும்

குறுநில மன்னர் ஒருவரைக் காண்பதற்கு ஒரு புலவர் வந்தார். மன்னர் அப்போது, வயலில் அறுவடை நடைபெறுவதைக் கண்காணித்துக் கொண்டிருந்தார்.

புலவர் அங்கேயே சென்றார். வயல் வரப்பு களில் நடந்து பழக்கம் இல்லாதவர், காலில் செருப் பும் இல்லை. தட்டுத் தடுமாறி நடந்தார்.

சிறிது தொலைவில், தடுமாறி நடந்து வரும் புலவரைப் பார்த்து, ''புலவரே! கணிகையர் போல் நடிக்கிறீரே?'' என நகைச்சுவையாக கூறினார் மன்னர்.

''அங்கே என்ன அறுத்துக் கட்டுகிறதோ?'' என்றார் புலவர்.

'கணிகையர் போல்' என்பது, வரப்பில் நடந்து பழக்கம் இல்லாதது தாசியின் நடிப்புப் போல் என்பது மற்றொரு பொருள்.

'அங்கே என்ன அறுத்துக் கட்டுகிறதோ?' என்பது, அங்கே கதிர்களை அறுத்துக் கட்டுகிறீரோ' என்பது ஒரு பொருள். அறுத்துக் கட்டுவது அங்கே தாசிகள் இனத்தில் உண்டா? (விவாகரத்து) என்பது மற்றொரு பொருள்.

## 53

### பெருக்க வந்தவள்

தம் நண்பர் ஒருவரைக் காண்பதற்காக வெளியூருக்குச் சென்றார் புலவர் ஒருவர். அந்த நண்பரும்கூட ஒரு புலவரே!

இரவு உணவு முடிந்தது. ''தாம் வெளியே திண்ணையில் படுத்துக் கொள்ளுகிறேன். அதிகாலையில் சுருக்க எழுந்து புறப்படுவதற்கு ஏற்றதாகும்'' என்றார் புலவர்.

''நீங்கள் வெளியிலே படுத்தால் சுருக்க எழுந்துவிடத் தோதாகும் இல்லாவிடில், வேலைக்காரி பெருக்க வந்து விடுவாள்'' என்றார் வீட்டுக்காரர்.

மறுநாள் காலையில், வேலைக்காரி பெருக்க வந்தவள், பெருத்த உடல் உடையவளாகக் காணப்பட்டாள், வீட்டுக்காரர் கூறியது உண்மையே என்று தெரிந்தது புலவருக்கு.

('பெருக்க'- வீட்டைக் கூட்டுவதற்கு, பெருத்த உடல் உடையவள்,)

## 54

### நகைக்கு என்ன குறைவு?

சுப்பிரமணியக் கவிராயரும், முத்துச்சாமி புலவரும் ஓர் திண்ணையில் இருந்து, உரையாடி மகிழ்ந்து கொண்டிருந்தனர்.

அப்பொழுது, அவ்வழியாகச் சென்று கொண்டிருந்த மற்றொரு புலவர் அவர்களைப் பார்த்து, ''என்ன, நகை பலமாக இருக்கிறதே?'' என்றார்.

''ஆம், முத்தும் மணியும் சேர்ந்தால், நகைக்கு என்ன குறைவு?'' என்றார் கவிராயர்.

(முத்து - முத்துச்சாமிப் புலவர், மணி - சுப்பிரமணியக் கவிராயர்; நகை - அணிகலம், சிரிப்பு).

## 55

### புலவரின் சினம்

குறுநில மன்னரைக் கண்டு பரிசு பெறுவதற்காக, ஒரு புலவர் தம் மனைவியுடன் காட்டு வழியில் நடந்து வந்துகொண்டிருந்தார்.

அப்போது, கள்வன் ஒருவன், புலவர் மனைவியின் தாலியைப் பறித்துக் கொண்டு ஓடிவிட்டான்.

புலவர் அதனால் வருத்தமுற்று வேகமாக வந்தார். மன்னரைப் பார்த்து ''மன்னரே! உம் ஆட்சியில், புருஷன் இருக்க, தாலி அறுமோ?'' என்று கோபமாகக் கேட்டார்.

மன்னர் புரிந்து கொண்டார். மன்னர் புலவரை சமாதானப் படுத்தி, உபசரித்தார். அதன் பின், காவலர்களை அனுப்பி, கள்வனைக் கண்டு பிடித்து, களவுபோன தாலியை மீட்டு, புலவரிடம் அளித்து, பல பரிசுகளும் அளித்தார்.

## 56

### கலன்கள் கொண்டது கலப்பை

இரண்டு புலவர்கள் வழியில் சென்று கொண்டிருந்தனர். சிறிது தொலைவில், ஏழை ஒருவன் தலையில் ஒரு பையைச் சுமந்து வந்து கொண்டிருந்தான்.

அதைக் கண்ட புலவர், ''அதோ ஒருவன் கலப்பையுடன் வந்து கொண்டிருக்கிறான்'' என்றார்.

''அவன் தலையில், சில பொருள்களைக் கொண்ட பை மட்டுமே காணப்படுகிறது; கலப்பையைக் காணவில்லையே?'' என்றார் மற்றொரு புலவர்.

அவனோ, அவர்கள் எதிரில் வந்துவிட்டான். அவனைப் பார்த்து, ''உன் தலையில் இருக்கும் பையில் என்ன இருக்கிறது?'' என்று கேட்டார் முதல் புலவர்.

''பையில், சமையல் கலங்கள் உள்ளன!'' என்றான் அவன். முதல் புலவர், வெற்றிப் புன்னகையுடன் பார்த்தீரா? நான் கூறியபடி, கலப்பை அது!'' என்றார்.

"இன்னும் கலப்பையா? என்று கூறி விழித்தார், இரண்டாவது புலவர்.

'சமையற் கலன்கள் நிறைந்த பை! கலன்கள் நிறைந்த பை' கலப்பையல்லவா? என்று உறுதிப் படுத்தினார் முதல் புலவர்.

('கலப்பை' என்பதை, 'உழுபடை' என்று மட்டுமே எண்ணினார் இரண்டாவது புலவர்.)

# 57

## வயிற்றை நிரப்பலாம்

இரண்டு புலவர்கள் ஒருநாள் வயல்களைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தார்கள்.

அவர்களில் ஒருவர் தட்டார் இனத்தவர்; மற்றவர் சாணார் இனத்தவர்.

தட்டாரப் புலவரைக் கேலி செய்ய நினைத்து, "இந்த ஆண்டு, தட்டான் பயிர் நன்கு விளைந்துள்ளது" என்று கூறிச் சிரித்தார் சாணார் புலவர். சாணார் புலவரின் கிண்டலை உணர்ந்த தட்டாரப் புலவர்.

"தட்டான் பயிர் நன்கு விளைந்திருந்தால் சாண்கும்பியை நன்றாக நிரப்பலாம்" என்றார்.

(சாண்கும்பி-'சாண்வயிறு' 'சாணார் வயிறு' என்று பொருளாகும்.)

## 58

### இரண்டும் பறக்கின்றது

இரண்டு புலவர்கள், வீட்டுத் திண்ணையில் இருந்து கொண்டு நகைச்சுவையாகப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒரு புலவர் தட்டார் இனத்தவர்; மற்ற புலவர் 'பிள்ளை' இனத் தவர்.

அப்போது திண்ணைக்கு வெளியே தட்டான் ஒன்று பறந்தது.

அதைப் பார்த்ததும், "அதோ தட்டான் பறக் கிறது பாரும்!" என்றார் 'பிள்ளை' இனப் புலவர்.

தட்டானுடன் அதன் குஞ்சும் பறந்ததைப் பார்த்ததும், "அதோடு பிள்ளையும் பறக்கிறது, பாரும்!" என்றார் 'தட்டார்' இனப் புலவர்

('தட்டான்' என்பது ஒருவகைப் பூச்சி; 'பிள்ளை' அதன் குஞ்சு")

## 59

### பாலும் கசந்ததோ?

வயதான புலவர் ஒருவர் நோய்வாய்பட்டு படுத்தபடியே கிடந்தார். அவருடைய மகன் பணி விடை செய்து வந்தான்.

புலவரால் உணவு உட்கொள்ள இயலவில்லை.

பாலில் துணியை நனைத்து, புலவர் வாயில் பிழிந்து வந்தான் மகன்.

ஒரு நாள் அவ்வாறு பாலைப் பிழியும் போது, புலவர் பாலை வெளியே துப்பி விட்டார்.

அதைப் பார்த்த மகன், ''அப்பா! பால் கசக்கிறதா?'' என்று கேட்டான்.

அப்பொழுது புலவர், ''பாலும் கசக்கவில்லை துணியும் கசக்க வில்லை'' என்றார்.

அழுக்கான, துணியை தினமும் கசக்க வேண்டும். அன்று துணியைக் கசக்கிக் காய வைக்க மறந்துவிட்டதை உணர்ந்தான் மகன்.

நோய் வாய்பட்டு, பேச இயலாமல், உணவை உண்ண முடியாமல் இருந்த நிலையில், புலவரின் நகைச்சுவை மறையவில்லை.

## 60

### தலை விதிவசம்

தலையில் சிறு மூட்டை, முடிச்சுகளைச் சுமந்து கொண்டு ஒரு புலவர் தம் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தார்.

அதைப் பார்த்த அவர் நண்பர், ''புலவரே, இது என்ன?'' என்று கேட்டார்.

''என் தலை விதிவசம்'' என்று பதில் அளித்தார் புலவர்.

'தலைவிதி வசம்' - ஊழ்வினையின் பயன். இவ்வாறு பொருள் கொள்ளலாம்.

'என் தலைவி திவசம்' என் மனைவி திவசம், சிரார்த்தம்; இறந்தோருக்கு வருடம் ஒரு முறை செய்யும் ஒரு கிரியை.

## 61

### பனிக்காலம் கொடிது

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களும் ஆறுமுக நாவலர் அவர்களும் ஒரு சமயம் சந்தித்துக் கொண்டனர். அப்போது பனிக்காலம்.

''பனிக்காலம் மிகவும் கொடியது'' என்றார் ஆறுமுக நாவலர்.

''பனிக்காலம் நன்று'' என்றார் பிள்ளை அவர்கள்.

இருவருடைய மாணவர்களிடையே, 'கொடிதே' 'நன்றே' என வாக்குவாதம் உண்டாயிற்று.

அதை அறிந்த பிள்ளை அவர்கள், ''நாவலர் அவர்கள், கூறியதை, நான் மறுத்துக் கூற வில்லையே. 'பனிக்காலம் நன்று பனியைக் காட்டிலும் ஆலம் (நஞ்சு) நல்லது; பனிக்காலம் அவ்வளவு கொடியது.'' என்றுதானே அழுத்தமாகச் சொன்னேன்'' என்றார்.

வாதிட்ட இருதரப்பு மாணவர்களும் தலை கவிழ்ந்தனர்.

# 62

## இங்கே இருந்த தமிளர் எங்கே?

ஒரு திருமண வீட்டில், தண்ணீர் பானை அருகில் ஒரு தமிளர் (குவளை) வைக்கப்பட்டிருந்தது. எவரோ அதை எடுத்துச் சென்று விட்டார் போலும்! அங்கே தமிளர் காணப்படவில்லை,

அவசரமாக ஒருவர் தாகம் மிகுதியால், தண்ணீர் பானை அருகில் சென்றார்.

தமிளரை அங்கே காணாமையால், இங்கே இருந்த தமிளர் எங்கே?'' என்று இரண்டு முறை கத்தினார்.

அப்போது திண்ணையில் உட்கார்ந்திருந்த புலவர், கத்திக் கொண்டிருந்தவரிடம், ''இங்கே இருந்த தமிழர் இங்குதான் இருக்கிறார்கள்! வேறு எங்கும் போய் விடவில்லை; மேலும், இங்கே இருப்பவர்கள் அனைவரும் தமிழர்களே. இது தெரியாமல் கத்துகிறீரே'' என்றார்.

('ள', 'ழ' வேறுபாட்டினால், உச்சரிப்பால், பொருள் மாறுபடுகிறது.)

(தமிளர்-குவளை. தமிழை தாய்மொழியாகக் கொண்டவர் தமிழர்)

## 63

### ஒரு வழிப்பாதை

இளம் புலவர் ஒருவருக்கு திருமணம் நடைபெற்றது. அதன்பின், ஓர் ஆண்டு கழித்து, அவரைக் காணவந்தார் அவருடைய உறவினரான புலவர்.

இளம் புலவரிடம், ''மாமனார் வீட்டாரின் போக்குவரத்து உண்டா?'' என விசாரித்தார் உறவினரான புலவர்.

அதற்கு, ''போக்கு உண்டு; இங்கிருந்து பொருள், பணம், துணிகள் போகும்; ஆனால், வரத்து எதுவும் அங்கிருந்து வந்தது இல்லை'' என்று கூறினார் இளம் புலவர்.

அப்போ, ''ஒரு வழிப்பாதை போலும்!'' என்றார் உறவினரான புலவர்.

## 64

### வண்ணாத்தி வந்தாளா?

தம் அறையிலிருந்து, படித்துக் கொண்டிருந்த புலவர்; அப்போது ''வண்ணாத்தி'' என்றார்.

அடுக்களையிலிருந்த புலவரின் மனைவி, 'வண்ணாத்தி வந்திருக்கிறாள்' என்று நினைத்து, விரைவாக வந்தாள். ''வண்ணாத்தி எங்கே'' என்று கேட்டாள் புலவரிடம்.

''வண்ணாத்தி வரவில்லையே!'' என்றார் புலவர்.

''வண்ணாத்தி என்று சொன்னீர்களே' என்னையா 'வண்ணாத்தி' என்று அழைத்தீர்கள்?'' என்று கடுகடுத்தாள் மனைவி,

''வண்ணாத்தி வந்தாளா'' என்று உன்னிடம் கேட்பதற்கு. 'வண்ணாத்தி' என்று தொடங்கினேன் 'வந்தாளா' என்று கேட்குமுன், நீ விரைவாக வந்து விட்டாய்!'' என்று கூறிச் சமாளித்தார் புலவர்.

## 65

## பொடிவைத்து நகை செய்தல்

ஒரு வீட்டில் பலர் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். அவர்களில் பொற்கொல்லவர் ஒருவரும் புலவர் ஒருவரும் இருந்தனர்.

அவர்களில் ஒருவர், அடிக்கடி பொடி போடும் வழக்கம் உள்ளவர். பொடி போடாமல் அவரால் சிறிதுநேரம் கூட இருக்கவே முடியாது.

'அவரை திண்டாடச் செய்ய நினைத்து, அவருடைய பொடி டப்பியை எடுத்துக் கையில் மறைத்துக் கொண்டார் பொற்கொல்லர்.

சிறிது நேரம் கழித்து, அவர் தம்முடைய பொடி டப்பியைக் காணாமல் திண்டாடினார். அதைப்பார்த்து தட்டார் நகைத்தார்.

அதைக் குறிப்பால் உணர்ந்த புலவர், தட்டாரைப் பார்த்து, ''பத்தரே! நீர் பொடி வைத்துத்தானே நகை செய்கிறீர்?'' என்று கேட்டார்.

''ஆமாம்'' என்று கூறி தலையை அசைத்தார் பத்தர்.

பொடி போடுகிறவருக்கு அவர்கள் பேச்சு விளங்கவில்லை.

''பொடி டப்பி, பொடிடப்பி'' என்று சொல்லிக் கொண்டிருந்தார் அவர். முன்பு கேட்டபடியே, மறுபடியும் பத்தரிடம் கேட்டார் புலவர். பத்தரும் முன்பு போலவே, ஆமாம் என்றார். ஆயினும், பொடிகாரருக்கு அது புரியவில்லை. ''தட்டார்கள் பொடி வைத்து, நகை செய்வர் என்றே எண்ணி னார் அவர்.பொடி டப்பியை இழந்தவருக்குச் சினம் எழுந்தது.

புலவர், பத்தரைப் பார்த்து, ''இனிமேலும் பொடி வைத்துகொண்டு நகைக்காதீர் இனிமேலும், அவர் பொறுக்கமாட்டார்'' என்றார்.

பத்தர், உடனே பொடி டப்பியைக் கொடுத் தார், பொடி போடுகிறவரிடம். அதன் பின்னரே, ''பொடி வைத்து நகை செய்தல்'' என்பதன் பொருள் அவருக்கு விளங்கியது.

## 66

### இருவருமே திறமைசாலிகள்

புலவர் ஒருவர் திண்ணையில் அமர்ந்து படித்துக்கொண்டிருந்தார். அப்போது, அவரைக் காண மற்றொரு புலவர் வந்தார்.

''வாரும் இரும் படியும்!'' என்றார் வீட்டிலிருந்த புலவர். உடனே, ''குறட்டைச் சிக்கெனப் பிடி!'' என்றார் வந்த புலவர்.

'இரும் படியும்' என்பது வாரும், உட்காரும், படியும்! என்பது ஒரு பொருள். 'இரும்பை அடியும்' என்பது மற்றொரு பொருள். 'குறட்டைச் சிக்கெனப் பிடி' என்பதற்கு, நான் உட்கார்ந்து படிக்கத் தொடங்கினால், 'நீர் குறட்டைவிட்டு தூங்க வேண்டியதே? என்பது ஒரு பொருள்.

''நான் இரும்பை அடிக்க முற்பட்டால், நீர் குறடைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள வேண்டியதே' என்பது மற்றொரு பொருள்.

## 67

### புலவர் கொடுத்த சாபம்

செல்வர் ஒருவர் இருந்தார். அவர் மிகவும் கருமி. எவருக்கும் எதுவும் கொடுக்கவே மாட்டார்.

ஒரு புலவர், அந்தச் செல்வரைப் புகழ்ந்து பாடினால், ஏதேனும் தருவார், என்று பாடல்

இயற்றிக் கொண்டு அவரைக் காணச் சென்றார்.

புலவரைப் பார்த்ததும், ''நீர் யார்? எதற்காக வந்தீர்?'' என்று கடுகடுப்புடன் கேட்டார்.

புலவர், பாடலைப் பாடத் தொடங்கினார்,

''போதும்; உம்முடைய பாடலால், என்ன லாபம்? உமக்கு வேலை எதுவும் கிடையாதா? ஏதேனும் வேலைபார்த்து வருமானத்துக்கு வழி தேடக் கூடாதா? பாடலைப் பாடிவந்து ஏன் தொந்தரவு செய்கிறீர்? பணம் குப்பையிலா கொட்டிக் கிடக்கிறது? காசின் அருமை உமக்குத் தெரியவில்லை, 'காசா லேசா?' என்று பொரிந்தார் செல்வர்.

புலவர் மிகுந்த வருத்தமுற்று, ''நீ காசாலே சா'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டார்.

புலவரின் சாபத்தை உணராத செல்வர், புலவரை வெளியேற்றி விட்டதில் மகிழ்ச்சி கொண்டார்.

''காசினாலே நீ செத்துப்போ'' ''காசா லேசா''

## 68

### புகார் கூறாதீர்கள்

''காவிரிப்பூம் பட்டினம் என்பது பற்றி, ஒரு கழகத்தில் சொற்பொழிவு நிகழ்த்த வேண்டிய

புலவர் குறிப்பிட்ட நேரத்தில் வர இயலாமல் ஒரு மணி நேரம் தாமதமாக வந்து சேர்ந்தார்.

அப்போது கழகத் தலைவர் எழுந்து, ''அன்பர்களே! 'புகார்' என்பதுபற்றி பேச வேண்டிய புலவர் குறிப்பிட்ட நேரத்தில், இங்கு வந்து சேர இயலாமல், தாமதமாக வர நேரிட்டது. இதுபற்று நீங்கள் புகார் செய்யக்கூடாது. அவர்தம் விடுதியிலும் புகாராய், புகாரைப்பற்றிப் பேச வந்துள்ளார். பேசி முடியும் வரை எங்கும் புகார். ஆகவே, நீங்களும் புகார் கூறாமல், புகார் பற்றிய சொற்பொழிவைக் கேட்டு மகிழ்வீர்களாக!'' என்றார்.

(காவிரிப்பூம்பட்டினத்துக்குப் 'புகார்' என்ற பெயர் உண்டு; 'புகார்'-எங்கேயும் போகமாட்டார். 'புகார்'-குறை சொல்லுதல்; இவ்வாறு பல பொருள்கள் உண்டு)

## 69

### எது சிறந்தது?

சர்க்கரைப் புலவர் என்பது ஒரு புலவரின் பெயர்; சவ்வாதுப் புலவர் என்பது மற்றொரு புலவரின் பெயர்.

மேற்படி இரண்டு புலவர்களும் ஒருசமயம் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தனர்.

அப்போது, சர்க்கரைப் புலவர் அடிக்கடி தமது தமது பெருமையைக் குறிப்பிட்டே பேசலானார்.

அதைப் பொறுக்காத சவ்வாதுப் புலவர், ''ஐயா, சர்க்கரைப் புலவரே! உங்கள் பெருமையை அதிகமாக பறைசாற்றாதீர்கள். 'சர்க்கரை' தொண்ட மட்டுமே; சவ்வாது கண்ட இடமட்டும்'' என்றார்.

## 70

### கூசாமல் குடிப்பவர்

ஒரு புலவருடைய வீட்டுக்கு, அவருடைய நண்பர் ஒருவர் சென்றார், களைப்பு மிகுதியால் அவருக்குத் தண்ணீர் தாகம் மிகுந்தது. சுற்று முற்றும் பார்த்தார். அங்கே கூசா என்ற பாத்திரத்தில் தண்ணீர் இருந்தது. அதன் அருகில் குவளை இல்லை. எனவே, அப்படியே கூசாவைத் தூக்கி தண்ணீர் அருந்தினார்.

அதனைப் பார்த்த புலவர், ''நீர் கூசாக் குடியராக இருக்கிறீர்!'' என்று கூறினார்.

('கூசாக் குடியர்' என்ற சொல்லுக்கு, 'கூசாமல் குடிப்பது' என்ற பொருள் உண்டு. மதுவைக் குடிப்பதற்கும் அவ்வாறு சொல்வது உண்டு. கூசாவோடு குடிப்பது' என்றும் பொருள்.)

## 71

### எல்லோரையும் தாங்குகிறார்

உள்ளூரில் இருந்த கோயில் ஒன்று மிகவும் பாழடைந்து காணப்பட்டது. அதைப் புதுப்பித்து

குடமுழுக்குச் செய்தால் ஊர் மக்களுக்கு நன்மை உண்டாகும் என்று கருதினர் சிலர்.

அதற்காக, ஊர் மக்களிடமும், பக்கத்து சிற்றூர் களிலும் நன்கொடை வசூலித்தனர் ஒருசிலர்.

ஒவ்வொருவரும் இயன்றதை (பத்து, இருபது, ஐம்பது என) நன்கொடை அளித்தனர்.

உள்ளூர் பிரமுகர் ஒருவர், ஆயிரம் ரூபாய் நன்கொடை அளித்திருந்தார்.

நிதி வசூலித்தவர்கள், நன்கொடை அளித்த வர்களின் பெயர்களை எழுதி வைத்தனர். அதைக் கண்ட ஒருவர், "ஆயிரம் ரூபாய் நன்கொடை அளித்தவர், அவர் ஒருவரே! அவருடைய பெயரை முதலில் எழுதாமல் அடியில் - கடைசியில் எழுதி வைத்திருக்கிறீர்களே?" என்று வருத்தத்தோடு சொன்னார்.

அப்போது, அங்கு இருந்த புலவர், "ஆயிரம் ரூபாய் கொடுத்தவர் பெயர் அடியில் இருந்தால் என்ன? அவர் எல்லோரையும் தாங்கிக் கொண்டி ருக்கிறார்" என்றார்.

## 72

## குற்றமாகக் கருத வேண்டாம்

கொங்கு நாட்டுப் புலவர் ஒருவர் நூல் இயற்றி னார். அந்த நூலின் வெளியீட்டு விழா, தஞ்சை

கரந்தை தமிழ்ச் சங்கத்தில் நடைபெற்றது. புலவர் கள், அறிஞர்கள், பொதுமக்கள் பலரும் கூடி இருந்தனர்.

மேற்படி நூலை எழுதிய ஆசிரியர் 'கொங்கை' என்னும் சொல்லை, பல இடங்களில் கூறியிருந் தார்.

அப்போது அவையில் இருந்த பேரறிஞர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் எழுந்து, ''நூலாசிரியர் கொங்கு நாட்டவர்; ஆதலினால், தமது நாட்டை அடிக்கடி நூலில் கொங்கை என்று குறிப்பிட்டிருக்கிறார். நீங்கள் யாரும் அதனைக் குற்றமாக எண்ணிக் கொள்ளாதீர்கள்'' என்று கூறினர்.

மேற்படி நூலாசிரியர் நன்றி கூறும்போது, ''நாட்டார் ஐயா அவர்கள் நாட்டைப்பற்றிக் கருத்துச் செலுத்துவது மிகவும் போற்றத் தக்கதாக இருக்கிறது'' என்றார்.

('கொங்கு நாடு' என்பது, கோயமுத்தூர் மாவட்டத்தைக் குறிக்கும் 'கொங்கை' என்றும் கூறுவர். 'கொங்கை' என்பது தனத்தையும் குறிப்பிடுவதாகும்.

## 73

### உண்டு உவக்கவில்லை

அறச் சாலையில் உணவு அருந்திவிட்டு வெளியே வந்த புலவரைப் பார்த்து "உண்டு

வந்தீரோ?'' என்று கேட்டார் அவருடைய நண்பர்.

அதற்கு புலவர், ''உண்டு உவந்தேன் இல்லை; சோற்றிலே கல்லும், நெல்லும் காணப்பட்டன; சாம்பார் ரசம் முதலானவற்றிலே உப்பு மிகுதி. இவ்வாறு இருந்ததனால், நான் உண்டு உவக்க வில்லை.'' என்று பதில் அளித்தார் புலவர்.

('உண்டு வந்தீரா? என்பதை உண்டுவந்தீரா- உண்டு உவந்தீரா? என பொருள் பிரித்து, பதில் அளித்தார் புலவர். உவந்து - மகிழ்ந்து)

## 74

### சருவமும் உமக்கே!

புலவர் ஒருவர், தம் நண்பர் வீட்டுக்கு விருந் தினராகச் சென்றிருந்தார். பனிக்காலம் ஆனதால், சருவத்தில் வெந்நீர் வைக்கப்பட்டிருந்தது. புலவர் குளிக்கச் சென்றார்.

அப்போது, ''புலவரே, நன்றாகக் குளியுங்கள். வெந்நீர் முழுவதும் உங்களுக்குத்தான்!'' என்றார் நண்பர்.

அதைக் கேட்ட புலவர், ''சருவமும் எனக்குத் தானா?'' என்று கேட்டார்.

''ஆம், சருவமும் உங்களுக்குத்தான்; வீட்டுக் குப் போகும்போது அதையும் நீங்கள் எடுத்துச் செல்லுங்கள்'' என்று கூறினார் நண்பர்.

(சருவம் - எல்லாம்; உலோகத்தால் செய்யப் பட்ட பாத்திரம்.)

## 75

### வாயில் எடுக்க வேண்டுமா?

பொங்கல் விழாவுக்குப் புடைவை எடுப்பதற் காக, மனைவியுடன் புலவர் துணிக்கடைக்குச் சென்றார்.

கடையில் நுழையும்போது, புலவரிடம் ''வாயி லெடுக்க வேண்டும்'' என்றாள் மனைவி.

''அப்படியா? இங்கே வா'' என்று அவளைச் சாக்கடைப் பக்கம் அழைத்துச் சென்றார் புலவர்.

மனைவி, ''இங்கே ஏன் அழைத்துக்கொண்டு வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

''வாயில் எடுக்க வேண்டும் என்று சொன்னாயே எடு'' என்றார் புலவர்.

மனைவி சிரித்தபடியே, ''வாயில் புடவை எடுக்க வேண்டும் என்றல்லவா சொன்னேன்'' என்றார்.

''மசக்கை வந்து விட்டது போலும் என்று நான் நினைத்து விட்டேன்'' என்று கூறிச் சிரித்தார் புலவர்.

## 76

### முதல் தரம் அல்ல பல தரம்

தம் இல்லத்துக்கு எவர் வந்தாலும் அவர்களுக்கு உணவு அளிப்பது ஒரு செல்வருடைய இயல்பு 'போதும், போதும்' என்று கூறுவது உணவேயே யன்றி, வேறு அல்ல என்று கூறுவார் அவர். அவர் அளிக்கும் உணவு முதல்தரமானதாகும்.

இரண்டு புலவர்கள் அந்தச் செல்வர் இல்லத்துக்குச் சென்று உணவு அருந்தினர். ''சாப்பாடு முதல் தரம்'' என்றார் புலவர்.

மற்றொரு புலவர், நான் இவருடைய இல்லத்தில் பலமுறை சாப்பிட்டிருக்கிறேன்; எப்பொழுது சாப்பிட்டாலும் முதல் தரமாகவே இருக்கும். இன்று கூட சாப்பாடு முதல்தரம் தான் ஆனால், நான் பலதரம் சாப்பிட்டுவிட்டு, இன்று முதல்தரம் என்று சொல்வது எனக்கே வருத்தமாக இருக்கிறது'' என்றார்.

(முதல் தரம் என்பது, முதன்மையான சிறப்புடையது; முதல் தடவை - என்பது முதல் முறையானது. அதேபோல, பல்தரம், பலதடவை என்பதைக் குறிக்கும்.)

## 77

### தவறி விட்டார்!

பேரறிஞராகத் திகழ்ந்த பெரும்புலவர் திடீரென இறந்து போனார்.

அச் செய்தியைத் தெரிவிக்க, அவரை நன்கு அறிந்து, பழகிய புலவரிடம் சொல்லச் சென்றார் ஒருவர். தயக்கத்துடன், "இன்னார் தவறி விட்டார்" என்று சொன்னார்.

அதைக் கேட்டதும் அந்தப் புலவர், "அவர் அனைத்திலும் வல்லவர்; அவர் எதிலும் தவறவே மாட்டார், அத்தகையவர் தவறி விட்டார் என்று கூறுகிறீர்களே! அது பொருந்தாது தவறுவது அறிவற்றவர்களுக்கு அல்லவா ஏற்படும்" என்றார்.

செய்தி சொல்ல வந்தவருக்கு புலவர் கூறிய சொற்கள் விளங்காமல் சிறிது நேரம் விழித்துக் கொண்டிருந்தார். பிறகுதான், புலவர் கூறியவற்றி லிருந்து 'தவறுதல்' என்ற சொல்லுக்கு 'பிழை செய்தல்' என்னும் பொருளில் புலவர் பேசுகிறார் என்பது விளங்கியது.

செய்தி சொல்ல வந்தவரின் முகத்தின் சோகத்தை அறிந்து, 'அவர் இறந்து விட்டார்' என்பதை புலவர் உணர்ந்தார்.

'செத்துப் போனார்', 'இறந்து விட்டார்', 'காலமாகி விட்டார்' என்று சொல்லாமல், 'தவறி விட்டார்' என்று கூறுவதும் உண்டு.

## 78

### குத்து விளக்கும் கூடை விளக்கும்

புலவர் ஒருவர் தம்முடைய நண்பரான புலவர் வீட்டுக்கு இரவு வேளையில் சென்றார்.

அப்போது ஒரு கூடையைக் கவிழ்த்து வைத்து, அதன்மீது அகல் விளக்கை வைத்துப் படித்துக் கொண்டிருந்தார் புலவர்.

அதைக் கண்டு, என்ன புலவரே இப்படி படித்துக் கொண்டிருக்கிறீர்களே? ஒரு குத்து விளக்கு வைத்துக் கொள்ளக் கூடாதா? நான் குத்து விளக்கை வைத்துத் தான் படிக்கிறேன்'' என்றார் வந்த புலவர்.

''அப்படியா? ஒரு குத்து விளக்கை விட ஒரு கூடை விளக்கு சிறப்பு அல்லவா? இதிலிருந்து, தங்களிலும் நான் சிறப்பாக இருக்கிறேன் என்று தெரியவில்லையா?'' என்றார் வீட்டுக்காரப் புலவர்.

(குத்து-ஒருபிடி; கூடை-அளவில் பெரியது).

## 79

### ஏன் பிச்சை எடுக்க வேண்டும்?

இரவு வேளையில், புலவர் ஒருவர் தம்முடைய நண்பர் வீட்டுக்குச் சென்றார். இரவில் அங்கே தங்குவதாக இருந்தார்.

அந்த நண்பர், புலவரிடம், ''தங்களுக்கு இரவுச் சாப்பாடு என்ன?'' என்று கேட்டார்.

அதற்குப் புலவர், நான் 'ஐயம்' எடுக்கும் வழக்கமே இல்லை; எதற்குப் பிச்சை எடுக்க வேண்டும்? ஊரில் இருந்தால், வீட்டில் சாப்பிடு வேன்; வெளியூர் சென்றால் நண்பர்கள் வீட்டில் சாப்பிடுவேன்; நண்பர்கள் இல்லாத ஊராக இருந்

தால், உணவு விடுதியில் சாப்பிடுவேன். இன்று இராப் பொழுதுக்கு இவ்விடமே உணவுக்கு ஏற்பாடு செய்து விடுங்கள்'' என்று கூறினார்.

'இரவு' என்ற சொல்லுக்குப் 'பிச்சை', 'ஐயம்' என்ற பொருள் கொண்டு அதனால் புலவர் அவ்வாறு கூறியுள்ளார் என நண்பர் புரிந்து கொண்டார்.

## 80

## தையற்காரரின் தடுமாற்றம்

சட்டை முதலானவற்றைத் தைப்பதற்காக புலவர், வாடிக்கையான தையற்காரரிடம் கொடுத் திருந்தார். தைக்க வேண்டியவை எல்லாம் தைத்து முடிந்தன. சிறிதளவு துணி மீதி இருந்தது. ''அதில், தங்கள் சிறிய பையனுக்கு ஒரு சட்டை தைக்கலாம்'' என்றார் தையற்காரர்.

''உடனே புலவர், ''ஆந்தை, ஆந்தை'' என்று கூறினார்.

புலவர் கூறியதைக் கேட்டதும் தையற்காரர் ஆந்தைபோல் விழித்து, ''ஐயா, நான் சொன்னது என்ன? நீங்கள் 'ஆந்தை,ஆந்தை' என்கிறீர்களே!'' என்றார்.

உடனே புலவர், ''நீ சொன்னபடி, ஆம்தை; ஆம்தை' என்றுதானே சொன்னேன். உனக்கு அது புரியாமல், ஆந்தைபோல் விழிக்கிறாய்!'' என்றார்.

(ஆம்' என்பதும் 'தை' என்பதும் ஒன்று சேர்ந்து புணர்ந்தால், 'ஆந்தை' என்றுதான் வரும்.)

# 81

## கேள்விக்குச் சரியான பதில்

ஆற்றின் கரையில் நின்று இரண்டு புலவர்கள் உரையாடிக் கொண்டிருந்தனர்.

அவர்களில் ஒருவர் மற்றவரை மட்டம் தட்ட எண்ணினார்.

ஆறுக்கு அப்பால் என்ன இருக்கிறது? இப்பால் என்ன இருக்கிறது?'' என்று கேட்டார்.

'ஆற்றுக்கு' என்று கேட்காமல், ஆறுக்கு என்ற குறும்பான கேள்வி கேட்டதனால், இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிறது என்று எண்ணிய மற்றொரு புலவர், ''ஆறுக்கு அப்பால் ஏழும், இப்பால் ஐந்தும் இருக்கின்றன'' என்று மறுமொழி கூறினார்.

# 82

## அண்டம் காக்கப் பிறந்தவர் யார்?

கறுப்பு நிறமுடைய புலவர் ஒருவர் வறுமையில் உழன்றதால், எலும்பும் தோலுமாக இருந்தார்.

அரசனைப் பார்த்து, பரிசு பெறலாம் என்று எண்ணிச் சென்றார் புலவர்.

அவரைப் பாரத்ததும், ''இவர் அண்டங் காக்கைக்குப் பிறந்தவர் போலும்'' என்று அருகில் இருந்த அமைச்சரிடம் மெதுவாகக் கூறினார்.

அதைச் செவிமடுத்த புலவர் உடனே எழுந்து, "அரசே! அண்டங் காக்கப் பிறந்தவர் தாங்களே! நான் அல்லன்!" என்று கூறிவிட்டு அமர்ந்தார்.

அரசன் கடுஞ்சினத்துடன் புலவரைப் பார்த்தான். அரசனின் சினக் குறிப்பை அறிந்த புலவர் உடனே எழுந்து, "அரசே! சினம் கொள்ளற்க. அண்டத்தைக் காக்கப் பிறந்தவர் தாங்களே!"

அரசன் புலவரின் அறிவைப் பாராட்டி பரிசு அளித்தான்.

(அண்டம் - உலகம்; அண்டங் காக்கை கரிய நிறமுள்ளது)

## 83

### தோட்டத்திலே ஆடு!

புலவர் தம்முடைய வீட்டிலே ஒரு மாணவனுக்குப் பாடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்போது, தோட்டத்திலே ஒரு ஆடு மேய்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தார்.

புலவர், மாணவனைப் பார்த்து, "தோட்டத்திலே ஆடு!" என்றார்.

மாணவன் உடனே எழுந்துபோய், தோட்டத்தில் விளையாடத் தொடங்கினான்.

அரைமணி நேரமாகியும் மாணவன் திரும்பி வராமல் விளையாடிக் கொண்டிருப்பதை எட்டிப்

பார்த்தார் புலவர். அவனோ ஆட்டை விரட்டாமல் விளையாடிக் கொண்டிருந்தான்.

அப்போதுதான் அவருக்குத் தம்முடைய அருமை மாணவன் 'ஆடு' என்பதற்கு, 'விளையாடு' என்று புரிந்து கொண்டிருக்கிறான் என்று விளங்கியது.

## 84

### இராத்திரிக்கு விளக்கெண்ணெய்

நண்பர் ஒருவர் இல்லத்திற்குப் புலவர் ஒருவர் இரவு வேளையில் வந்தார்.

அவரிடம் "இராத்திரி சாப்பிடுவதற்கு என்ன உணவு?" என்று கேட்டார் நண்பர்.

"இராத்திரிச் சாப்பாட்டுக்கு விளக்கெண்ணெய்" என்று பதில் அளித்தார் புலவர்.

அதைக் கேட்டதும் நண்பருக்கு வியப்பாகியது.

(இரவு நேரத்தில் (இராத்திரியில்) அகல் விளக்கில் போடப்படும் திரி, இராத்திரி தானே என்பதை உணர்ந்தார் நண்பர்.

## 85

### இரத்தினக் கம்பளம்

குறுநில மன்னர் ஒருவர் தம்முடைய மாளிகையின் வாசலில் நின்று கொண்டிருந்தார். அப்போது அவரைக் காண ஒரு புலவர் வந்தார். இருவரும் நின்று கொண்டே பேசிக் கொண்டு இருந்தனர்.

குறுநில மன்னர், 'கம்பளத்தார்' என்னும் இனத்தைச் சேர்ந்தவர்.

அவ்வழியாகப் போய்க் கொண்டிருந்த வேலை யாளைக் கூப்பிட்டு, "துரை அவர்களான கம்பள ரத்தினம் உட்காருவதற்கு ஒரு இரத்தினக் கம்பளம் கொண்டு வருக" என்றார் புலவர்.

கம்பள ரத்தினம், இரத்தினக் கம்பளம் என்ற அருமையான சொற்களைக் கேட்டதும் குறுநில மன்னருக்கு மகிழ்ச்சி கொள்ளவில்லை.

அந்த வேளையில் அந்த இடத்தைப் பெருக்கு வதற்கு வந்தான். அவனைப் பார்த்து, "அடே! நம் புலவர் வாயிலிருந்து உதிர்ந்த மணிகள் இங்கே கிடக்கலாம்; அவற்றைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு பிறகு, கூட்டலாம்" என்றார் குறுநில மன்னர்.

## 86

### இது மாமரம்!

ஒருநாள் பல புலவர்கள் சேர்ந்து உலாவச் சென்றார்கள். அப்போது வழியில் ஓர் இடத்தில் மாமரம் ஒன்று காணப்பட்டது. அது மிகப் பெரிதாக இருந்தது. அதைக் கண்டவர்கள் வியப்புடன் பார்க்காமல் அப்பால் செல்ல மாட்டார்கள்.

உலாவச் சென்றவர்கள், அந்த மாமரத்தைப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

அவர்களில் ஒருவர், ''இந்த மரம் மாமரம்'' என்று கூறினார்.

''மாமரம் என்பது யாருக்குத்தான் தெரியாது; இதை நீர் சொல்லவும் வேண்டுமா?'' என்று கூறி, சிரித்தார்கள் அவர்கள்.

இந்த மாமரம் இரட்டை மாமரம் என்பதை நீங்கள் அறிவீர்களா?'' என்று கேட்டார். மற்றவர் கள் ஒன்றும் விளங்காமல் விழித்தனர்.

புலவர், அவர்களைப் பார்த்து, ''நான் மாமரம் மாமரம் என்று கூறுகிறேன்; நீங்கள் என்ன சொல் கிறீர்கள்?'' என்று கேட்டார் அவர்கள் எவருமே பதில் கூறவில்லை.

உடனே புலவர், ''இந்த மாமரம் மாமரம், அதாவது மா - பெரிய, மரம்-மரம். இந்த மாமரம் பெரிய மரம்'' என்று கூறினார்.

## 87

### சீனி நாடார் சீனி கேட்கிறார

சீனி நாடார் என்னும் புலவர் திறமையான சொற்பொழிவாளர். பல ஊர்களுக்குச் சென்று சொற்பொழிவு நிகழ்த்தி வருவார்.

ஒரு சமயம், வெளியூர் சென்றிருந்தபோது, புலவர் சீனி நாடாருக்கு சங்கத்தினர் காபி வழங்கினர்.

அப்போது, நாட்டில் சீனிக்கு மிகவும் தட்டுப் பாடு; எனவே, சீனிக்குப் பதிலாக வெல்லம் கருப் பட்டியைப் பயன்படுத்தி வந்தனர் மக்கள். காபியின் நிறத்தைப் பார்த்தாலே தெரிந்துவிடும்.

''எப்படியாவது எனக்குச் சீனி போட்டுக் காபி வழங்குங்கள் என் பெயரே சீனி நாடார் அல்லவா?'' என்று கேட்டுக் கொண்டார்.

அப்போது அருகில் இருந்த உள்ளூர் புலவர், அவரைப் பார்த்து, ''ஐயா புலவர் அவர்களே! உங்கள் பெயரே சீனி நாடார். சீனியை (நாடாத வர்) விரும்பாதவர் என்று அமைந்துள்ளது. ஆனால் நீங்களோ சீனியை மிகவும் நாடுகிறீர்களே'' என்றார்.

## 88

## இடமா? வலமா?

சென்னை நகரப் பேருந்தில் புலவர் ஒருவர் பயணம் செய்துகொண்டிருந்தார்.

அப்போது பேருந்தில் கூட்டம் நிறைந் திருந்தது. புலவரின் நண்பர், இடம் இல்லாமை யால், தொங்கும் கைப்பிடியைப் பிடித்துக்கொண்டு நின்றார். அவரைப் பார்த்த புலவர் தாம் சிறிது தள்ளி உட்கார்ந்து. நின்று கொண்டிருந்த நண்பரை உட்காரச் சொன்னார்.

அவர் உட்கார்ந்ததும், ''எனக்கு தாங்கள் இடம் அளித்ததற்கு நன்றி'' என்றார் நண்பர்.

''நன்றாகப் பாருங்கள். இடமா கொடுத்தேன். வலம் அல்லவா கொடுத்திருக்கிறேன்'' என்றார் புலவர்.

('இடம்' என்பது உட்காரும் இடம். இடம்—இடது பக்கம் என்றும் பொருள். வலம்—வலது பக்கம்.)

## 89

### 'சிரஞ்சீவி'யாக இரு

புலவர் ஒருவர், ஒரு திருமணத்துக்குச் சென்றார்.

மணமகன் புலவரை வணங்கினான்.

''சிரஞ்சீவியாக இருப்பாயாக'' என்று வாழ்த்தினார் புலவர்.

அதைக்கேட்டுக் கொண்டிருந்த மற்றொரு புலவர், ''நீ எப்போதும் தலைசீவி, கிராப்பை நேராக வைத்துக் கொண்டு வாழ வேண்டும் என்று புலவர் வாழ்த்து கூறுகிறார்'' என்றார்.

வாழ்த்துரை கூறிய புலவர், அந்தப் புலவர் கூறிய பொருளில் நான் கூறவில்லை. ''நீ பட்டாளத்தில் சேர்ந்து, இராணுவ வீரனாகி பகைவர்களின் தலைகளைச் சீவிக் கொய்து வெற்றி வீரனாக வாழ வேண்டும் என்ற பொருளில்தான் நான் வாழ்த்துரை வழங்கினேன்'' என்றார்.

(சிரஞ்சீவி—நீண்ட நாள் வாழ்வாயாக. சிரம்—தலை; சீவி—கொய்தல்)

## 90

## பாராச் சேவகன் பார்க்கவில்லை

சிற்றரசர் ஒருவரைக் காண அவருடைய அரண்மனைக்கு ஒரு புலவர் சென்றார்.

பாராச் சேவகன் புலவரை உள்ளேவிட மறுத்து விட்டான்.

புலவர் மன்றாடிப் பார்த்தார். பயன் இல்லை; பிறகு, அங்கே வந்து கொண்டிருந்த ஒரு அதிகாரி யின் தயவால், அரசரிடம் போய்ச்சேர்ந்தார் புலவர்.

காவலாளியான பாராச் சேவகன், தம்மை உள்ளே விட மறுத்த செய்தியை, வருத்தத்துடன் அரசரிடம் கூறினார் புலவர்.

அரசர் வருந்தி, பாராச் சேவகன்மீது கடும் சினங்கொண்டு, உடனே அவனை வேலையிலிருந்து நீக்கிவிட உத்தரவிட்டார்.

பாராச் சேவகன் புலவரை அணுகி, காலில் விழுந்து வணங்கி, நடந்ததைக் கூறி தன் குடும்பத் தைக் காப்பாற்றுமாறு பணிவோடு மன்றாடினான்.

புலவர் அவனிடம் கருணை கொண்டார். அரசரைப் பார்த்து, ''அரசர் பெருமானே! அவன் பாராச் சேவகன். ஆகையால், என்னையும் பார்க்காமல், எதனையும் பார்க்காமல் நடந்து கொண்டான். நீங்களும் அவனுடைய தவறைப் பாராமல், மன்னித்து, அவனை மீண்டும் வேலை

யில் சேர்த்துக் கொள்ள வேண்டும்'' என்று வேண்டி கொண்டார்.

(பாராச் சேவகன் என்றால் காவலாளி என்று பொருள்.)

## 91

### நகை அணியாத நகைப் புலவர்

ஒரு சிற்றூரில் புலவர் ஒருவர் வாழ்ந்து வந்தார் அவர் எப்போதும், எவரிடத்திலும், நகைச்சுவை யோடு பேசுவார்.

அந்த ஊர் மக்கள் அனைவரும் அவரை நகைப் புலவர் என்றே அழைத்தனர்.

அந்தச் செய்தி புலவருக்கும் தெரிந்தது

''என்னை எல்லோரும் 'நகைப்புலவர்' என்று அழைக்கின்றனர். என்னிடம் எந்த நகையும் இல்லை; காதில் கடுக்கண் இல்லை; கையிலே காப்பு இல்லை; கழுத்திலே சங்கிலியும் இல்லை. ஒரு சிறு நகையும் அணிந்திராத என்னை, 'நகைப் புலவர்' என்று பலரும் அழைக்கின்றனரே!'' என்றார் புலவர்.

(நகை—அணிகலம்; புகழ்ச்சி இகழ்ச்சிக் குறிப்பு; பிறரைச் சிரிக்க வைத்தல்)

## 92

### 'இனியவர்'

பெருமை வாய்ந்த புலவர் ஒருவர் இருந்தார். அவருடைய புகழை அறிந்த ரசிகர் ஒருவர், அந்தப்

புலவரைக் கண்டு மகிழ அவர் இல்லத்துக்குச் சென்றார். வணங்கினார்.

அவரை 'வருக' என்றார் புலவர்.

''நான் என்னை 'இன்னார்' என்று தங்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளுகிறேன்'' என்று கூறத் தொடங்கினார்.

அதைக் கேட்ட புலவர், ''தாங்கள் என்னைக் காண விரும்பி வந்திருக்கிறீர்கள். எனக்கு எத்த கைய தீமையும் செய்யவில்லை. ஆகவே, 'இனிய வர்' என்றே தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ள லாம் 'இன்னார்' என்று கூற வேண்டியதில்லை'' என்றார்.

(இன்னார்-பகைவர்; இத்தன்மையோர் என்று பொருள்).

## 93

### கோடிக்குப் பதில் சோடி

ஒரு ஆதீனத் தலைவரைக் காணச் சென்றார் புலவர் ஒருவர். அவருடன் உரையாடிக் கொண்டி ருந்தார்.

அடுத்த சில நாட்களில் பொங்கல் விழா. ஆகையால், மடத்தைச் சேர்ந்த நிலத்தை உழும் விவசாயிகளுக்கும், மடத்துக் கணக்குப் பிள்ளை, வேலை ஆட்கள் முதலானோருக்கு வேட்டி, துண்டு களை வழங்கிக் கொண்டிருந்தார் மடத்தின் தலைவர்.

அதைக் கவனித்துக் கொண்டிருந்த புலவர், "பெருமைக்கு உரிய தம்பிரான் அவர்களே! எனக்குக் கோடி வேட்டி தந்தருள வேண்டிக் கொள் கிறேன்" என்றார்.

தம்பிரானும் புலமையுடையவர். நகைச்சுவை யுடன், "இங்கு ஆதீனத்தில் உள்ள அனைத்தையும் ஒருங்கே திரட்டினாலும் கூட, ஆயிரத்துக்குமேல் மேல் போகாது. அவ்வாறிருக்க தங்களுக்குக் கோடி வேட்டி தருவதற்கு நாம் எங்கே போவோம்? வேண்டுமானால், சோடி வேட்டி தருகிறோம் வாங்கிச் செல்லுங்கள்" என்றார்.

(கோடி-நூறு லட்சம் எண்ணிக்கை, சோடி இரண்டு; இரட்டிப்பு)

## 94

### ஏன் கேட்டுக்கிட்டே நிற்கிறாய்?

தஞ்சை, கரந்தை புலவர் கல்லூரி தலைவர் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை அவர்களைக் காண அவருடைய இல்லத்துக்குச் சென்றார் இளம் புலவர் ஒருவர்.

வாசலில் நின்று கொண்டே, "ஐயா, இருக்கி றார்களா?" என்று கேட்டார் இளம் புலவர்.

அப்போது வெளியே எட்டிப் பார்த்த கவியரசு அவர்கள், "ஏன் கேட்டுக்கிட்டே நிற்கிறாய்!" என்றார்.

(கேட்டு - வாசற் கதவு - 'கேட்டுக் கிட்டே நிற்கிறாய்' இரு பொருள்படும்படி கூறினார் கவியரசு.

# 95

## ஆற்றல் மிக்க உரையாசிரியர்

காஞ்சிபுரம் மகாவித்துவான் இராமசாமி நாயுடு அவர்கள் அரசு அலுவலகத்தில் உயர் பதவி யில் இருந்து கொண்டே தமிழ்ப் பணியும் ஆற்றி வந்திருக்கிறார்.

'அறப்ப ளீச் சுர சதகம்' முதலிய நூல்களுக்கு உரை எழுதியுள்ளார்.

ஓய்வுள்ள போது, மாணவர்களுக்குத் தமிழ் அறிவுறுத்தியுள்ளார். இவர் உரை எழுதும் ஆற்றலை பலர் வியந்துள்ளனர்.

ஏதேனும் ஒரு செய்யுள் நூலுக்கு உரை எழுதும் போது, உரை எழுதிய தாள்களை அச்சகத்துக்கு அனுப்புவாராம்,

சில சமயம், காலதாமதம் ஆகுமாம். அப்போது, அச்சகத்தார் இவரை அவசரப்படுத்தினால், உடனே அச்சகத்துக்குச் சென்று, நூலைக் கையில் வைத்துக் கொண்டு, அச்சுக்கோப்பவர் அருகே ஒரு நாற்காலி யில் அமர்ந்து உரை சொல்லுவாராம். அச்சுக் கோப்பவரும் காதில் கேட்டுக்கொண்டே எழுத்துக் களைக் கோப்பாராம் பிறகு அச்சுப்பிழை திருத்தி நூல் அச்சிடப்படுமாம்.



# முத்துக்களோ முத்துக்கள் !

முல்லை பிஎல். முத்தையா

திருக்குறள் முத்துக்கள்
அறிஞர்கள் உதிர்த்த முத்துக்கள்
பிரமுகர்கள் உதிர்த்த முத்துக்கள்
பாரதியார் உதிர்த்த முத்துக்கள்
நாமக்கல் கவிஞர் உதிர்த்த முத்துக்கள்
பெரியார் உதிர்த்த முத்துக்கள்
அண்ணா உதிர்த்த முத்துக்கள்
ராஜாஜி உதிர்த்த முத்துக்கள்
பகவத் கீதை முத்துக்கள்
அண்ணாவின் அறிவுக் கனிகள்
தமிழர் திருமணம்
திரு. வி. க. உதிர்த்த முத்துக்கள் (அச்சில்)
புதுமைப்பித்தன் உதிர்த்த முத்துக்கள் ,,


முல்லை
பதிப்பகம்
323/10, கதிரவன் காலனி,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை - 600 040

Wrapper Printed at Eskay Art Printer, Madras-5
Phone : 844727